## தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

**ஆனந்த சமரக்கோன்**
**கவிதையின் பெயர்ப்பு**



*''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்*
*நாட்டுக்கும் முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''*

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

*கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக்கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளுவதற்கு நீங்கள் பலம்பெற வேண்டும் என்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.*

*இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன் மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்களது ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை உங்களுக்கு அரசினால் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.*

*ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறிவரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகிற்கும் செயற்றிறன் மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.*

*அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக்கூடிய நிதிக்குப் பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.*

*எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.*

**அகில விராஜ் காரியவசம்**
***கல்வி அமைச்சர்***

# முன்னுரை

நாளுக்கு நாள் உலகம் புதிதாகின்றது. மாற்றமுறுகின்றது. அதை சரியாகப் புரிந்து கொண்டு காணப்படக்கூடிய நல்லவற்றை பாதுகாப்பதற்கும் மாற்றமுறும் உலக சவால்களைப் பலமாக எதிர்கொள்வதற்கும் கற்றலானது உங்களுக்கு வழி காட்டுகின்றது. ஒருவருக்கொருவர் நட்புடன் செயற்பட்டு சூழலுக்கும் வேலையுலகிற்கும் பொருந்துமாறு ஓய்வினை பயனுள்ளதாகக் கழித்து சமநிலை ஆளுமை கொண்டதொரு பிரசையாவதற்குத் தேவையான திறன்களை உங்களுக்குப் பெற்றுத்தருவதே எமது இலக்காகும்.

உள்நாட்டில் போன்றே சர்வதேசத்துடனும் சிறந்த தொடர்புகளைக் கட்டியெழுப் பக்கூடிய சமநிலை ஆளுமை கொண்ட ஒருவராவதற்கு உங்களுக்குத் துணைக்கரமான கற்றல் சாதன உற்பத்திக்கு கல்வி வெளியீட்டுத் திணைக்களம் தன்னை அர்ப்பணித்துள்ளது.

2016 ஆம் ஆண்டுமுதல் நடைமுறைப்படுத்தப்படுகின்ற புதிய பாடத்திட்டத்தின் கீழ் தரம் 1 முதல் தரம் 4 வரை அண்ணளவாக 25 வகையான பாடநூல்கள் இது வரைக்கும் உங்கள் கைகளுக்கு வழங்கப்பட்டுள்ளன. அரசினால் இலவசமாக வழங்கப்படுகின்ற இப்பாடநூல்கள் மூலம் மிக உயர்ந்தமட்டப் பயன்களைப் பெற்றுக் கொள்வதுடன் அவற்றை உங்கள் கண்களைப் போன்று பாதுகாப்பதும் உங்கள் கடமையென்பதை நினைவூட்டுகின்றேன். புதிய பாடத்திட்டத்தின் கீழ் 2020 ஆம் ஆண்டுக்காக அறிமுகப்படுத்தப்படுகின்ற இப்புதிய பாடநூல்களை நன்கு கற்று அதில் உள்ளடக்கப்பட்டுள்ள செயற்பாடுகள் மூலம் உங்கள் திறன்களையும் செயலாக்கத்தையும் வளர்த்துக்கொண்டு கௌரவத்துடன் எதிர்கால உலகில் நுழைவதற்கு உங்களை வாழ்த்துகின்றேன்.

இந்நூலை உங்கள் கைகளில் தருவதற்கு உழைத்த எழுத்தாளர் மற்றும் பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது உளப்பூர்வமான நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
2019.04.10

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**

கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## வழிகாட்டல்

**டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி**

கல்வி வெளியீட்டு ஆணையாளர் (அபிவிருத்தி)

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## இணைப்பாக்கம்

**அ. ஞானேஸ்வரன்**

அபிவிருத்தி உத்தியோகத்தர்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## பதிப்பாசிரியர் குழு

**வி. சாரதாம்பாள்**

உதவிக் கல்விப் பணிப்பாளர்

வலயக் கல்விப் பணிமனை

தீவகம்

**அருள்மாலா குலரத்தினம்**

உதவி ஆணையாளர்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

**ஜீ. எம். வடநம்பி**

சிரேஷ்ட விரிவுரையாளர்

நில்வளா தேசிய கல்வியியற் கல்லூரி

வில்பிட, அக்குரஸ்ஸ

**ஆர். எம். கே. த சில்வா**

பதிற் பணிப்பாளர்

ஆரம்பக் கல்வித் திணைக்களம்

தேசிய கல்வி நிறுவகம்

மகரகம

**எச். எம். கே. ஏரத்**

பிரதிப் பீடாதிபதி
சாரிபுத்த தேசிய கல்வியியற் கல்லூரி
நித்தம்புவ

**வை. மானெல் குணசிங்க**

பிரதிக் கல்விப் பணிப்பாளர்
ஆரம்பக் கல்விக் கிளை
கல்வி அமைச்சு

## எழுத்தாளர் குழு

**என். வாகீசமூர்த்தி**
ஓய்வுபெற்ற கல்விப் பணிப்பாளர்

**ஆர். எஸ். ஈ. புஸ்பராஜன்**
ஓய்வுபெற்ற உதவிக் கல்விப் பணிப்பாளர்

**கே. ஏ. சீ. சீ. முனிதாச**

அதிபர்
மே/ ஹோ புவக்பிட்டியா வடக்கு மகா வித்தியாலயம்
புவக்பிட்டியா

**ஏ. டீ. பீ. புஸ்பிக்க**

பிரதி அதிபர்
மே/ஜய/ கொட்டாவ வடக்கு தர்மபால வித்தியாலயம்
ஹோக்கந்தர வீதி, பன்னிப்பிட்டிய

**டீ. ஏ. த. கொஸ்தா தசநாயக்க**

ஆசிரியர்
விசாகா கல்லூரி
கொழும்பு 5

**டீ. கே. ஏ. எஸ். யாப்பா**

ஆசிரியர்
மே/ஜய அனுலா வித்தியாலயம்
நுகேகொட

**டபிள்யூ.ஏ.எம். ஏரத் அபேசிங்க**
ஆசிரியர் ஆலோசகர்
வலயக் கல்விப்பணிமனை
குருணாகல்

## மொழிப் பதிப்பாசிரியர்

**காந்திமதி துஷ்யந்தன்**

ஓய்வு பெற்ற ஆசிரியர்

## சரவை பார்ப்பு

**ச. சிவபாலன்**

ஓய்வு பெற்ற ஆசிரியர்

## கணினி வடிவமைப்பு

**உஷாநந்தினி சிவபிரதாப்**

கணினி வடிவமைப்பாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

**நிரோஷனி தேவநாயகம்**

கணினி வடிவமைப்பாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## முகப்பு அட்டையும் சித்திரங்களும்

**கே. ஏ. சமன் கலுபோவில**

மே/கம்/ அனுர மத்திய மகா வித்தியாலயம்
யக்கல

## நூலாக்கக் குழுவின் குறிப்பு

இந்நூல் 2020 ஆண்டிலிருந்து நடைமுறைக்கு வரும் புதிய பாடத்திட்டத்திற்கு இசைவாகத் தரம் 5 இல் உள்ள மாணவர்களுக்காக ஆக்கப்பட்டுள்ளது.

ஆசிரியர் வழிகாட்டியில் குறிப்பிட்ட செயற்பாடுகளில் மாணவர்களை ஈடுபடுத்தி அதன் பின்னர் பாடநூலில் உள்ள பயிற்சிகளில் அவர்களை ஈடுபடத்தக்கவாறு பாடநூல்களைத் தயாரித்தல் நூலாக்கக் குழுவின் முக்கிய நோக்கமாகும்.

தரம் 4 இன் பாடநூலைப் போன்று தரம் 5 இன் பாடநூலையும் செயல் நூலாகப் பயன்படுத்தலாம். பாடநூலில் உள்ள பயிற்சிகளில் ஒரு பகுதிக்குப் பாடநூலிலேயே விடை எழுதத்தக்கதாக இருக்கும் அதே வேளை வேறொரு பகுதிக்குப் பயிற்சி நூலில் விடை எழுத வேண்டும். இங்கு வினாவைப் பிரதி செய்யாமல் உரிய பயிற்சி எண்ணுக்கு எதிரே விடையை மாத்திரம் எழுதுதல் போதியதாகும்.

இப்பாடநூலை கற்பதன் மூலம் மாணவர்களின் ஆக்கத்திறன், பிரசினங்களைத் தீர்க்கும் ஆற்றல், தொடர்பாடல் ஆற்றல் ஆகிய திறன்கள் எதிர்பார்க்கப்படுகின்றன. ஒருவரோடு ஒருவர் சுமுகமாகச் செயற்பட்டு, சுற்றாடலிற்கும் வேலை உலகிற்கும் இசைவாக அமைந்து சமநிலை ஆளுமையுடைய ஒரு நற்பிரசையாவதற்குத் தேவையான தேர்ச்சிகளைப் பெற்றுக்கொள்ளத் தரம் 5 கணிதப் பாடநூல் மாணவர்களுக்கு உதவுமென நூலாக்கக் குழு எதிர்பார்க்கின்றது.

**நூலாக்கக் குழு**

# பொருளடக்கம்

# 1 எண்கள் I

1. கீழே தரப்பட்டுள்ள அடைப்பில் உள்ள இலக்கங்களில் நான்கைப் பயன்படுத்தி நான்கு இலக்க எண்கள் ஐந்தை எழுதுக.

1 8 5 0 3
4 9 2 7 6

உதாரணம் : 3058

2. அட்டவணையை நிரப்புக.

| எண் | எண்பெயர் |
|---|---|
| 6528 | ............................................................ |
| .................. | இரண்டாயிரத்து நானூற்று முப்பது |
| .................. | மூவாயிரத்து நூறு |
| 5060 | ............................................................ |
| .................. | ஆயிரத்து எட்டு |
| 9015 | ............................................................ |

3. அட்டவணையைப் பிரதி செய்து வெற்றிடங்களை நிரப்புக.

| எண் | இலக்கம் | இலக்கம் அமைந்துள்ள இடம் | இடப் பெறுமானம் | இலக்கத்தினால் வகைகுறிக்கப்படும் பெறுமானம் |
|---|---|---|---|---|
| 2348 | 2 | ஆயிரத்தினிடம் | 1000 | 2000 |
| 6572 | 6 | .............................. | .............. | ................... |
| 5024 | 4 | .............................. | .............. | ................... |
| 8700 | ........... | .............................. | .............. | 700 |
| 9605 | ........... | பத்தினிடம் | .............. | ................... |
| 7003 | ........... | நூறினிடம் | .............. | ................... |

**4** எண்சட்டத்தில் வகைகுறிக்கப்பட்டுள்ள எண்ணையும் அதன் எண்பெயரையும் எழுதுக.

உதாரணம்




2311

இரண்டாயிரத்து முந்நூற்றுப் பதினொன்று

(1)




.................................

.................................

(2)




.................................

.................................

(3)




.................................

.................................

(4)




.................................

.................................

(5)




.................................

.................................

(6)




.................................

.................................

## 5 விரித்து எழுதுக.

உதாரணம் | 4031 | → 4000 + 0 + 30 + 1

(1) 7658 → 7000 + .......... + 50 + 8

(2) 5090 → .......... + .......... + 90 + 0

(3) 8027 → .......... + .......... + 20 + ..........

(4) 1200 → 1000 + .......... + .......... + ..........

(5) 6005 → .......... + .......... + .......... + ..........

**குறிப்பு**

9999 இலும் 1 கூடிய எண்

9999 + 1 = 10 000 - பத்தாயிரம்

10 000 - பத்தாயிரம்
20 000 - இருபதாயிரம்
30 000 - முப்பதாயிரம்
40 000 - நாற்பதாயிரம்
50 000 - ஐம்பதாயிரம்

60 000 - அறுபதாயிரம்
70 000 - எழுபதாயிரம்
80 000 - எண்பதாயிரம்
90 000 - தொண்ணூறாயிரம்

99 999 இலும் 1 கூடிய எண்

99 999 + 1 = 100 000 - நூறாயிரம்

## 6 எண்ணையும் எண்பெயரையும் எழுதுக.

உதாரணம் 59 999 + 1 = 60 000 - அறுபதாயிரம்

(1) 69 999 + 1 = ........................ - ..........................................

(2) 79 999 + 1 = ........................ - ..........................................

(3) 89 999 + 1 = ........................ - ..........................................

(4) 99 999 + 1 = ........................ - ..........................................

7 எண்பெயருக்கேற்ப எண்ணை எழுதுக.

**உதாரணம் :** எழுபத்திரண்டாயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்திரண்டு
72 932

(1) பத்தாயிரத்து நூற்றுப் பன்னிரண்டு

(2) பதின்மூவாயிரத்து இருநூற்று இருபது

(3) இருபத்தெட்டாயிரத்து ஐந்நூறு

(4) நாற்பத்தோராயிரத்து நானூற்று எண்பத்தைந்து

(5) அறுபத்தொன்பதாயிரத்து முந்நூற்று எழுபத்தேழு

(6) முப்பத்தைந்தாயிரத்துப் பத்தொன்பது

(7) ஐம்பதாயிரத்து ஐந்து

8 விடை எழுதுக.

**உதாரணம்**

பத்தாயிரத்தினிடத்து இலக்கம் 2, ஆயிரத்தினிடத்து இலக்கம் 7, நூறினிடத்து இலக்கம் 3, பத்தினிடத்து இலக்கம் 9, ஒன்றினிடத்து இலக்கம் 4 ஆகவுள்ள எண் யாது?

27 394

(*a*) பத்தாயிரத்தினிடத்து இலக்கம் 3, ஆயிரத்தினிடத்து இலக்கம் 5, நூறினிடத்து இலக்கம் 1, பத்தினிடத்து இலக்கம் 4, ஒன்றினிடத்து இலக்கம் 7 ஆகவுள்ள எண் யாது?

(*b*) ஒன்றினிடத்து இலக்கம் 6, பத்தினிடத்து இலக்கம் 0, நூறினிடத்து இலக்கம் 4, ஆயிரத்தினிடத்து இலக்கம் 2, பத்தாயிரத்தினிடத்து இலக்கம் 8 ஆகவுள்ள எண் யாது?

(*c*) பத்தாயிரத்தினிடத்து இலக்கம் 4, ஆயிரத்தினிடத்து இலக்கம் 0, நூறினிடத்து இலக்கம் 1, பத்தினிடத்து இலக்கமும் ஒன்றினிடத்து இலக்கமும் எவையேனும் இரு இலக்கங்களாகவுள்ள ஓர் எண்ணை எழுதுக.

9. வெற்றிடங்களை நிரப்புக..

| முந்திய எண் | எண் | பிந்திய எண் |
|---|---|---|
| 9 999 | 10 000 | 10 001 |
| ........... | 40 000 | ................. |
| ........... | ................. | 70 000 |
| ........... | 59 600 | ................. |
| 85 099 | ................. | ................. |
| ........... | ................. | 100 000 |

10. அட்டவணையைப் பிரதி செய்து வெற்றிடங்களை நிரப்புக.

| எண் | இலக்கம் | இலக்கம் அமைந்துள்ள இடம் | இடப் பெறுமானம் | இலக்கத்தினால் வகைகுறிக்கப்படும் பெறுமானம் |
|---|---|---|---|---|
| 38 237 | 3 | பத்தாயிரத்தினிடம் | 10 000 | 30 000 |
| 24 150 | 5 | ................................ | ............... | ..................... |
| 40 856 | 0 | ................................ | ............... | ..................... |
| 67 400 | 4 | ................................ | ............... | ..................... |
| 79 008 | ........... | நூறினிடம் | ............... | ..................... |
| 97 541 | ........... | ................................ | ............... | 7 000 |

11. தரப்பட்டுள்ள எண்களை விரித்து எழுதுக.

உதாரணம் 99 999 = 90 000 + 9 000 + 900 + 90 + 9

(1) 19 435 = ............. + ............. + ............. + ............. + .............

(2) 38 249 = ............. + ............. + ............. + ............. + .............

(3) 56 080 = ............. + ............. + ............. + ............. + .............

(4) 69 100 = ............. + ............. + ............. + ............. + .............

(5) 81 577 = ............. + ............. + ............. + ............. + .............

# 2 எண்கள் II

**1**

| | | |
|---|---|---|
| 7, 1, 4, 8 | 5, 6, 3, 9 | 2, 6, 1, 4 |
| *A* | *B* | *C* |

மேலே *A*, *B*, *C* ஆகிய அடைப்புகள் ஒவ்வொன்றிலும் நான்கு இலக்கங்கள் வீதம் உள்ளன. ஒவ்வொரு அடைப்பிலும் உள்ள எல்லா இலக்கங்களையும் பயன்படுத்தி உருவாக்கக்கூடிய எண்களைக் கொண்டு கீழே உள்ள அட்டவணையை நிரப்புக.

| | *A* | *B* | *C* |
|---|---|---|---|
| மிகப் பெரிய எண் | | | |
| மிகச் சிறிய எண் | | | |

**2** பெரிய எண்ணிலிருந்து சிறிய எண் வரை ஒழுங்கு முறையில் (இறங்குவரிசையில்) எழுதுக.

(i) 15 368, 32 409, 51 794

(ii) 39 112, 38 009, 38 103

(iii) 52 600, 52 599, 52 550

(iv) 76 735, 76 729, 76 738

3. ஒரு தேர்தலில் மூன்று வேட்பாளர்கள் பெற்ற வாக்குகளின் எண்ணிக்கைகள் பின்வருமாறு.

| **வேட்பாளர்** | **வாக்குகளின் எண்ணிக்கை** |
| --- | --- |
| *A* | 28 546 |
| *B* | 19 370 |
| *C* | 32 095 |

(i) *மிகக் கூடிய வாக்குகளைப் பெற்ற வேட்பாளர் யார்?*

(ii) *மிகக் குறைந்த வாக்குகளைப் பெற்ற வேட்பாளர் யார்?*

(iii) *மூன்று வேட்பாளர்களும் பெற்ற வாக்குகளின் எண்ணிக்கைகளைச் சிறிய எண்ணிலிருந்து பெரிய எண் வரை ஒழுங்கு முறையில் (ஏறுவரிசையில்) எழுதுக.*

4.




மேலே தரப்பட்டுள்ள எல்லா இலக்கங்களையும் பயன்படுத்தி

(i) *உருவாக்கக்கூடிய மிகப் பெரிய எண்ணை எழுதுக.*

(ii) *உருவாக்கக்கூடிய மிகச் சிறிய எண்ணை எழுதுக.*

(iii) 80 000 *இற்கும்* 40 000 *இற்கும் இடையில் அமைந்துள்ள மூன்று எண்களை எழுதுக.*

5. தரப்பட்டுள்ள ஒவ்வொரு எண் தொகுதியையும் ஏறுவரிசையில் எழுதுக.

(i) 15 137, 24 348, 17 230

(ii) 45 928, 54 289, 42 598

(iii) 97 438, 97 529, 97 670

(iv) 23 509, 23 505, 23 555

# 3 கூட்டல்

1 விடை எழுதுக.

உதாரணம்

| | ஆ | நூ | ப | ஒ | |
|---|---|---|---|---|---|
| | 3 | 1 | 3 (1) | 8 | |
| + | 4 | 6 | 2 | 4 | |
| | 7 | 7 | 6 | 2 | |
| | | | | | |

(1)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 4 | 2 | 7 | 8 | |
| + | 1 | 3 | 5 | 1 | |
| | | | | | |
| | | | | | |

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 4 | 3 | 5 | 4 | |
| + | 2 | 4 | 2 | 9 | |
| | | | | | |
| | | | | | |

(3)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 3 | 6 | 3 | 5 | |
| + | 5 | 1 | 2 | 5 | |
| | | | | | |
| | | | | | |

(4)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 2 | 2 | 4 | 1 | |
| + | 6 | 3 | 6 | 7 | |
| | | | | | |
| | | | | | |

(5)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 1 | 9 | 0 | 4 | |
| + | 7 | 3 | 6 | 4 | |
| | | | | | |
| | | | | | |

(6)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 3 | 0 | 7 | 8 | |
| + | 3 | 3 | 3 | 1 | |
| | | | | | |
| | | | | | |

2 ஐந்து பாடசாலைகளில் கற்கும் மாணவர்களின் எண்ணிக்கைகள் பற்றிய தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.



காமினி வித்தியாலயம்
645



பீற்றர் வித்தியாலயம்
2670



விஜய வித்தியாலயம்
4046



மதீனா வித்தியாலயம்
1273



சரஸ்வதி வித்தியாலயம்
1938

கீழே தரப்பட்டுள்ள பாடசாலைகளில் கற்கும் மாணவர்களின் மொத்த எண்ணிக்கையைக் காண்க.

**உதாரணம்**

காமினி வித்தியாலயம், விஜய வித்தியாலயம்

$$\begin{array}{r} 645 \\ +\ 4046 \\ \hline 4691 \\ \hline \end{array}$$

காமினி வித்தியாலயத்திலும் விஜய வித்தியாலயத்திலும் கற்கும் மாணவர்களின் மொத்த எண்ணிக்கை 4691 ஆகும்.

(1) *காமினி வித்தியாலயம், மதீனா வித்தியாலயம்*
(2) *விஜய வித்தியாலயம், சரஸ்வதி வித்தியாலயம்*
(3) *மதீனா வித்தியாலயம், விஜய வித்தியாலயம்*
(4) *பீற்றர் வித்தியாலயம், விஜய வித்தியாலயம்*

③ விடை எழுதுக.

உதாரணம்

| | ஆ | நூ | ப | ஒ |
|---|---|---|---|---|
| | $\overset{1}{2}$ | $\overset{1}{6}$ | 9 | 2 |
| + | 1 | 5 | 4 | 3 |
| | 4 | 2 | 3 | 5 |

(1)

| | | | | |
|---|---|---|---|---|
| | 4 | 3 | 8 | 6 |
| + | 2 | 5 | 4 | 5 |
| | | | | |

(2)

| | | | | |
|---|---|---|---|---|
| | 3 | 2 | 7 | 6 |
| + | 2 | 4 | 3 | 5 |
| | | | | |

(3)

| | | | | |
|---|---|---|---|---|
| | 5 | 8 | 3 | 4 |
| + | 1 | 6 | 1 | 9 |
| | | | | |

(4)

| | | | | |
|---|---|---|---|---|
| | 2 | 6 | 7 | 8 |
| + | 1 | 3 | 5 | 0 |
| | | | | |

(5)

| | | | | |
|---|---|---|---|---|
| | 3 | 4 | 9 | 7 |
| + | 5 | 2 | 0 | 5 |
| | | | | |

(6)

| | | | | |
|---|---|---|---|---|
| | 4 | 3 | 5 | 2 |
| + | 3 | 6 | 5 | 7 |
| | | | | |

④ யோகட் உற்பத்தி செய்யும் நிலையங்கள் மூன்றில் ஒரு நாளில் உற்பத்தி செய்த யோகட் கோப்பைகளின் எண்ணிக்கை பற்றிய தகவல்கள் பின்வருமாறு.









விடை எழுதுக.

**உதாரணம்**

ராஜா உற்பத்தி நிலையத்திலும் சுதா உற்பத்தி நிலையத்திலும் உற்பத்தி செய்யப்பட்ட யோகட் கோப்பைகளின் மொத்த எண்ணிக்கை யாது?

$$\begin{array}{r} 4675 \\ +\ 3583 \\ \hline 8258 \\ \hline \end{array}$$

ராஜா உற்பத்தி நிலையத்திலும் சுதா உற்பத்தி நிலையத்திலும் உற்பத்தி செய்யப்பட்ட யோகட் கோப்பைகளின் மொத்த எண்ணிக்கை 8258 ஆகும்.

(1) *ராஜா உற்பத்தி நிலையத்திலும் பாமா உற்பத்தி நிலையத்திலும் உற்பத்தி செய்யப்பட்ட யோகட் கோப்பைகளின் மொத்த எண்ணிக்கை யாது?*

(2) *சுதா உற்பத்தி நிலையத்திலும் பாமா உற்பத்தி நிலையத்திலும் உற்பத்தி செய்யப்பட்ட யோகட் கோப்பைகளின் மொத்த எண்ணிக்கை யாது?*

**5** விடை எழுதுக.

**உதாரணம்**

| | ஆ | நூ | ப | ஒ | |
|---|---|---|---|---|---|
| | $\overset{1}{3}$ | $\overset{1}{7}$ | $\overset{1}{4}$ | 9 | |
| + | 2 | 6 | 8 | 5 | |
| | 6 | 4 | 3 | 4 | |
| | | | | | |

(1)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 4 | 5 | 6 | 3 | |
| + | 3 | 6 | 5 | 8 | |
| | | | | | |
| | | | | | |

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 5 | 6 | 3 | 7 | |
| + | 2 | 4 | 9 | 3 | |
| | | | | | |
| | | | | | |

(3)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 7 | 3 | 6 | 8 | |
| + | 1 | 6 | 5 | 4 | |
| | | | | | |
| | | | | | |

(4)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 2 | 0 | 7 | 5 | |
| + | 3 | 9 | 4 | 7 | |
| | | | | | |
| | | | | | |

(5)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 4 | 9 | 0 | 5 | |
| + | 4 | 0 | 9 | 5 | |
| | | | | | |
| | | | | | |

**6** விடை எழுதுக.

**உதாரணம்**

| | ஆ | நூ | ப | ஒ | |
|---|---|---|---|---|---|
| | $\overset{1}{4}$ | $\overset{2}{2}$ | $\overset{1}{6}$ | 7 | |
| | 1 | 7 | 9 | 1 | |
| + | 2 | 8 | 7 | 4 | |
| | 8 | 9 | 3 | 2 | |

(1)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 2 | 9 | 4 | 7 | |
| | 1 | 3 | 5 | 3 | |
| + | 3 | 8 | 0 | 4 | |
| | | | | | |
| | | | | | |

(2)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 1 | 3 | 6 | 9 | |
| | 2 | 1 | 4 | 8 | |
| + | 3 | 4 | 9 | 8 | |
| | | | | | |
| | | | | | |

(3)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 3 | 6 | 7 | 5 | |
| | 4 | 4 | 5 | 7 | |
| + | 1 | 8 | 6 | 7 | |
| | | | | | |
| | | | | | |

7 வசனம் எழுதித் தீர்க்க.

**உதாரணம்**

திஸ்ஸ, கஜபா, மகேசன் ஆகிய வித்தியாலயங்களில் கற்கும் மாணவர்களின் எண்ணிக்கைகள் முறையே 3156, 2220, 1458 ஆகும். இம்மூன்று வித்தியால யங்களிலும் கற்கும் மாணவர்களின் மொத்த எண்ணிக்கை யாது?

திஸ்ஸ வித்தியாலயத்தில் கற்கும் மாணவர்களின் எண்ணிக்கை = 3156

கஜபா வித்தியாலயத்தில் கற்கும் மாணவர்களின் எண்ணிக்கை = 2220

மகேசன் வித்தியாலயத்தில் கற்கும் மாணவர்களின் எண்ணிக்கை = 1458

மூன்று வித்தியாலயங்களிலும் கற்கும் மாணவர்களின்

மொத்த எண்ணிக்கை = 6834

திஸ்ஸ, கஜபா, மகேசன் ஆகிய வித்தியாலயங்களில் கற்கும் மாணவர்களின் மொத்த எண்ணிக்கை 6834 ஆகும்.

(1) $A$, $B$, $C$ ஆகிய மூன்று களஞ்சியங்களில் வைக்கப்பட்டிருந்த மாச் சாக்குகளின் எண்ணிக்கைகள் முறையே 2788, 3453, 2319 ஆகும். மூன்று களஞ்சியங்களிலும் வைக்கப்பட்டிருந்த மாச் சாக்குகளின் மொத்த எண்ணிக்கை யாது?

(2) ஒரு நூல் நிலையத்தை அமைப்பதற்குச் சிறிதரன், அப்துல்லா, மாட்டின் ஆகிய மூவரும் வழங்கிய செங்கற்களின் எண்ணிக்கைகள் முறையே 4175, 3780, 860 ஆகும். மூவரும் வழங்கிய செங்கற்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(3) ஒரு தொழிற்சாலையில் மூன்று மாதங்களில் உற்பத்தி செய்யப்பட்ட பயிற்சிப் புத்தகங்களின் எண்ணிக்கைகள் பற்றிய தகவல்கள் கீழே அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

| மாதம் | ஒக்ரோபர் | நவெம்பர் | டிசெம்பர் |
|---|---|---|---|
| பயிற்சிப் புத்தகங்களின் எண்ணிக்கை | 2775 | 3260 | 3580 |

மூன்று மாதங்களிலும் உற்பத்தி செய்யப்பட்ட பயிற்சிப் புத்தகங்களின் மொத்த எண்ணிக்கையைக் காண்க.

(4) ஒரு தென்னந்தோட்டத்திலிருந்து பெப்ரவரி மாதத்தில் 3950 தேங்காய்களும் மே மாதத்தில் 3068 தேங்காய்களும் ஆகஸ்ட் மாதத்தில் 2095 தேங்காய்களும் பறிக்கப்பட்டன. மூன்று மாதங்களி லும் பறிக்கப்பட்ட தேங்காய்களின் மொத்த எண்ணிக்கை யாது?

# 4 எண் கோலங்கள் I

**உதாரணம்**

21 இல் ஆரம்பித்து 6 ஆல் அதிகரிக்கும் எண் கோலம் கீழே தரப்பட்டுள்ளது.

21, 27, 33, 39, 45, 51, 57

1. எண் கோலத்தை இனங்கண்டு வெற்றிடங்களை நிரப்புக.

(1) 2, 8, 14, 20, ......., ......., .......

(2) 36, 42, 48, 54, ......., ......., .......

(3) 65, 71, 77, 83, ......., ......., .......

(4) 48, 54, 60, 66, ......., ......., .......

(5) 105, 111, 117, 123, ......., ......., .......

**உதாரணம்**

19 இல் ஆரம்பித்து 7 ஆல் அதிகரிக்கும் எண் கோலம் கீழே தரப்பட்டுள்ளது.

19, 26, 33, 40, 47, 54, 61

2. எண் கோலத்தை இனங்கண்டு வெற்றிடங்களை நிரப்புக.

(1) 1, 8, 15, 22, ......., ......., .......,

(2) 27, 34, 41, 48, ......., ......., .......

(3) 55, 62, 69, 76, ......., ......., .......

(4) 84, 91, 98, 105, ......., ......., .......

(5) 133, 140, 147, 154, ......., ......., .......

**உதாரணம்**

65 இல் ஆரம்பித்து 8 ஆல் அதிகரிக்கும் எண் கோலம் கீழே தரப்பட்டுள்ளது.

65, 73, 81, 89, 97, 105, 113

3 எண் கோலத்தை இனங்கண்டு வெற்றிடங்களை நிரப்புக.

(1) 9, 17, 25, 33, ......., ......., .......

(2) 44, 52, 60, 68, ......., ......., .......

(3) 31, 39, 47, 55, ......., ......., .......

(4) 75, 83, 91, 99, ......., ......., .......

(5) 163, 171, 179, 187, ......., ......., .......

**உதாரணம்**

85 இல் ஆரம்பித்து 9 ஆல் அதிகரிக்கும் எண் கோலம் கீழே தரப்பட்டுள்ளது.

85, 94, 103, 112, 121, 130, 139

4 எண் கோலத்தை இனங்கண்டு வெற்றிடங்களை நிரப்புக.

(1) 5, 14, 23, 32, ......., ......., .......

(2) 81, 90, 99, 108, ......., ......., .......

(3) 38, 47, 56, 65, ......., ......., .......

(4) 124, 133, 142, 151, ......., ......., .......

(5) 136, 145, 154, 163, ......., ......., .......

# 5 கழித்தல்

## 1 வசனங்களை எழுதித் தீர்க்க.

**உதாரணம்**

சுமங்கள வித்தியாலயத்தில் கற்கும் மாணவர்களின் மொத்த எண்ணிக்கை 573 ஆகும். இவர்களில் 357 பிள்ளைகள் ஆண் பிள்ளை களாயின், அங்கு உள்ள பெண் பிள்ளைகளின் எண்ணிக்கை யாது?

| | | |
|---|---|---|
| மாணவர்களின் மொத்த எண்ணிக்கை | = | 573 |
| ஆண் பிள்ளைகளின் எண்ணிக்கை | = | 357 |
| பெண் பிள்ளைகளின் எண்ணிக்கை | = | 216 |

சுமங்கள வித்தியாலயத்தில் கற்கும் பெண் பிள்ளைகளின் எண்ணிக்கை 216 ஆகும்.

(1) ஒரு தொழிற்சாலையில் குறித்த ஒரு தினத்தில் உற்பத்தி செய்யப்பட்ட மின்குமிழ்களின் எண்ணிக்கை 758 ஆகும். இவற்றில் 375 மின் குமிழ்கள் விற்பனை செய்யப்பட்டன. எஞ்சிய மின்குமிழ்களின் எண்ணிக்கையைக் காண்க.

(2) ஒரு பெட்டியில் 765 மாங்காய்களை வைக்கலாம். பெட்டியில் 380 மாங்காய்கள் உள்ளன. பெட்டியில் மேலும் எத்தனை மாங்காய்களை வைக்கலாம்?

(3) ஒரு புத்தகத்தில் 850 பக்கங்கள் உண்டு. சுராஜ் இதுவரை அப்புத்தகத் தில் 315 பக்கங்களை வாசித்துள்ளான். அவன் புத்தகத்தை முற்றாக வாசித்து முடிப்பதற்கு மேலும் எத்தனை பக்கங்களை வாசிக்க வேண்டும்?

(4) ஒரு கூட்ட மண்டபத்தில் 958 நபர்கள் அமரலாம். கூட்டம் தொடங்கும்போது 273 ஆசனங்கள் வெறுமையாய் இருந்தன. கூட் டத்தில் அமர்ந்திருந்தவர்களின் எண்ணிக்கை யாது?

(5) ஒரு மலை உச்சியில் உள்ள வணக்கத் தலம் ஒன்றைப் பார்வையிடச் சென்றபோது காந்தன் 277 படிகளை ஏறும்போது குமார் 138 படிகளை ஏறியிருந்தான். குமாரை விடக் காந்தன் மேலதிகமாக எத்தனை படிகளை ஏறியிருந்தான்?

**2** விடை எழுதுக.

**உதாரணம்**

| | ஆ | நூ | ப | ஒ |
|---|---|---|---|---|
| | 8 | 5 ~~6~~ | 17 7 | 3 |
| − | 2 | 3 | 8 | 1 |
| | 6 | 2 | 9 | 2 |

(1)

| | | | | |
|---|---|---|---|---|
| | 2 | 6 | 7 | 8 |
| − | 1 | 2 | 9 | 3 |
| | | | | |

(2)

| | | | | |
|---|---|---|---|---|
| | 8 | 3 | 9 | 8 |
| − | 3 | 5 | 2 | 0 |
| | | | | |

(3)

| | | | | |
|---|---|---|---|---|
| | 4 | 3 | 6 | 4 |
| − | 1 | 2 | 3 | 7 |
| | | | | |

(4)

| | | | | |
|---|---|---|---|---|
| | 7 | 4 | 3 | 6 |
| − | | 2 | 9 | 4 |
| | | | | |

(5)

| | | | | |
|---|---|---|---|---|
| | 3 | 0 | 5 | 4 |
| − | 1 | 4 | 2 | 4 |
| | | | | |

(6)

| | | | | |
|---|---|---|---|---|
| | 5 | 0 | 9 | 8 |
| − | 2 | 6 | 7 | 3 |
| | | | | |

(7)

| | | | | |
|---|---|---|---|---|
| | 4 | 1 | 2 | 7 |
| − | 2 | 0 | 6 | 5 |
| | | | | |

(8)

| | | | | |
|---|---|---|---|---|
| | 6 | 3 | 2 | 1 |
| − | | 5 | 1 | 0 |
| | | | | |

(9)

| | | | | |
|---|---|---|---|---|
| | 9 | 5 | 0 | 6 |
| − | 2 | 4 | 3 | 2 |
| | | | | |

3 வசனங்களை எழுதித் தீர்க்க.

ஆறு பாடசாலைகளில் கற்கும் மாணவர்களின் எண்ணிக்கைகள் வருமாறு.



விஜய வித்தியாலயம்
2350



பாத்திமா வித்தியாலயம்
1080



பெரகும் வித்தியாலயம்
2840



கெமுனு வித்தியாலயம்
4375



கணபதி வித்தியாலயம்
1236



செனரத் வித்தியாலயம்
2573

**உதாரணம்**

பாத்திமா வித்தியாலயத்திலும் பார்க்க விஜய வித்தியாலயத்தில் எத்தனை மாணவர்கள் கூடுதலாக உள்ளனர்?

| | | |
|---|---|---|
| விஜய வித்தியாலயத்தில் கற்கும் மாணவர்களின் எண்ணிக்கை | = | 2350 |
| பாத்திமா வித்தியாலயத்தில் கற்கும் மாணவர்களின் எண்ணிக்கை | = | 1080 |
| விஜய வித்தியாலயத்தில் கூடுதலாகக் கற்கும் மாணவர்களின் எண்ணிக்கை | = | 1270 |

விஜய வித்தியாலயத்தில் கூடுதலாகக் கற்கும் மாணவர்களின் எண்ணிக்கை 1270 ஆகும்.

(1) கணபதி வித்தியாலயத்திலும் பார்க்கக் கெமுனு வித்தியாலயத்தில் எத்தனை மாணவர்கள் கூடுதலாகக் கற்கின்றனர்?

(2) கெமுனு வித்தியாலயத்தின் மாணவர்களின் எண்ணிக்கைக்குச் சமனாவதற்குப் பெரகும் வித்தியாலயத்துக்கு மேலும் எத்தனை மாணவர்களைச் சேர்க்க வேண்டும்?

(3) சௌரத் வித்தியாலயத்தில் உள்ள மாணவர்களின் எண்ணிக்கையை விடப் பாத்திமா வித்தியாலயத்தில் எத்தனை மாணவர்கள் குறைவாக உள்ளனர்?

(4) மிகக் கூடிய மாணவர்களின் எண்ணிக்கையைக் கொண்ட வித்தியாலயத்திலும் மிகக் குறைந்த மாணவர்களின் எண்ணிக்கையைக் கொண்ட வித்தியாலயத்திலும் உள்ள மாணவர்களின் எண்ணிக்கைகளுக்கிடையேயான வித்தியாசம் யாது?

**4 விடை எழுதுக.**

உதாரணம்

| | ஆ | நூ | ப | ஒ |
|---|---|---|---|---|
| | 5 ~~6~~ | 15 5 | 8 ~~9~~ | 14 4 |
| − | 3 | 7 | 3 | 6 |
| | 2 | 8 | 5 | 8 |

(1)

| | | | | |
|---|---|---|---|---|
| | 7 | 3 | 8 | 2 |
| − | 1 | 5 | 1 | 6 |
| | | | | |

(2)

| | | | | |
|---|---|---|---|---|
| | 4 | 0 | 9 | 0 |
| − | 2 | 5 | 7 | 3 |
| | | | | |

(3)

| | | | | |
|---|---|---|---|---|
| | 3 | 2 | 6 | 6 |
| − | | 6 | 5 | 9 |
| | | | | |

(4)

| | | | | |
|---|---|---|---|---|
| | 8 | 0 | 8 | 3 |
| − | 2 | 4 | 0 | 5 |
| | | | | |

(5)

| | | | | |
|---|---|---|---|---|
| | 9 | 2 | 3 | 0 |
| − | | 4 | 2 | 6 |
| | | | | |

(6)

| | | | | |
|---|---|---|---|---|
| | 3 | 0 | 5 | 6 |
| − | 1 | 2 | 4 | 8 |
| | | | | |

## 5 விடை எழுதுக.

புத்தக விற்பனைக் கூடம் ஒன்றில் களஞ்சியப்படுத்தியிருந்த புத்தகங்கள் பற்றிய விவரம் கீழே தரப்பட்டுள்ளது.

| புத்தகங்களின் வகை | களஞ்சியப்படுத்தப்பட்ட புத்தகங்களின் எண்ணிக்கை |
|---|---|
| வரலாற்று நூல்கள் | 1087 |
| சமூக நாவல்கள் | 875 |
| இலக்கிய நூல்கள் | 3709 |
| விஞ்ஞான நூல்கள் | 599 |
| சிறுகதைகள் | 1846 |

(1) *சமூக நாவல்களை விட எத்தனை இலக்கிய நூல்கள் அதிகமாக உள்ளன?*

(2) *சிறுகதைகளிலும் பார்க்க எத்தனை வரலாற்று நூல்கள் குறைவாக உள்ளன?*

(3) *இலக்கிய நூல்களின் எண்ணிக்கைக்குச் சமனாவதற்கு மேலும் எத்தனை சிறுகதைகள் தேவை?*

(4) *விஞ்ஞான நூல்களின் எண்ணிக்கை வரலாற்று நூல்களின் எண்ணிக்கைக்குச் சமனாவதற்கு மேலும் எத்தனை நூல்கள் தேவை?*

## 6 தீர்க்க.

(1) *பாடசாலை விழா ஒன்றிற்கு 5762 பேர் அழைக்கப்பட்டிருந்தனர். அவர்களில் 3830 பேர் விழாவிற்கு வந்திருந்தனர். அழைக்கப் பட்டவர்களில் விழாவிற்கு வராதவர்களின் எண்ணிக்கை யாது?*

(2) *விஜய வித்தியாலய நூலகத்துக்கு 4835 புத்தகங்களும் கெமுனு வித்தி யாலய நூலகத்துக்கு 9760 புத்தகங்களும் கொண்டு வரப்பட்டன. விஜய வித்தியாலயத்திலும் பார்க்கக் கெமுனு வித்தியாலயத்துக்குக் கூடுதலாகக் கொண்டுவரப்பட்ட புத்தகங்களின் எண்ணிக்கை யாது?*

(3) ஒரு வெதுப்பகத்தில் ஜனவரி மாதத்தில் தயாரிக்கப்பட்ட பணிசு களின் எண்ணிக்கை 4875 ஆகும். பெப்ரவரி மாதத்தில் 2598 பணிசுகள் தயாரிக்கப்பட்டன. ஜனவரி மாதத்தில் மேலதிகமாக தயாரிக்கப்பட்டுள்ள பணிசுகளின் எண்ணிக்கை யாது ?

(4) ஒருவர் ஒரு தென்னந் தோட்டத்திலிருந்து 1530 தேங்காய்களையும் வேறொரு தென்னந் தோட்டத்திலிருந்து 1476 தேங்காய்களையும் வாங்கினார். அவர் இரு தென்னந் தோட்டங்களிலிருந்து வாங்கிய தேங்காய்களின் எண்ணிக்கைகளுக்கிடையே உள்ள வித்தியாசம் யாது ?

**7** **வெற்று அடைப்புக்குப் பொருத்தமான இலக்கத்தை எழுதுக.**

உதாரணம்

| | ஆ | நூ | ப | ஒ |
|---|---|---|---|---|
| | 5 | 7 | 4 | 5 |
| − | 1 | 2 | 6 | 2 |
| | 4 | 4 | 8 | 3 |

(1)

| | | | |
|---|---|---|---|
| | 8 | 2 | |
| − | 3 | □ | |
| | 4 | 8 | |

(2)

| | | | |
|---|---|---|---|
| | 6 | 3 | □ |
| − | 3 | 1 | 6 |
| | 3 | 1 | 5 |

(3)

| | | | | |
|---|---|---|---|---|
| | 3 | 8 | 4 | 7 |
| − | 1 | 6 | 5 | 3 |
| | 2 | □ | 9 | 4 |

(4)

| | | | | |
|---|---|---|---|---|
| | 7 | 9 | 2 | 6 |
| − | 1 | □ | 5 | 2 |
| | 6 | 1 | 7 | 4 |

(5)

| | | | | |
|---|---|---|---|---|
| | 7 | 9 | □ | 6 |
| − | 3 | 6 | 5 | 1 |
| | □ | 2 | 7 | 5 |

(6)

| | | | | |
|---|---|---|---|---|
| | 9 | 3 | 6 | □ |
| − | □ | 4 | 7 | 1 |
| | 6 | 8 | 9 | 2 |

# 6 பின்னங்கள்

1. தரப்பட்டுள்ள உருக்களில் அரைப்பங்கை $\left(\frac{1}{2}\right)$ நிறந்தீட்டுக.

உதாரணம்






2. தரப்பட்டுள்ள உருக்களில் காற்பங்கை $\left(\frac{1}{4}\right)$ நிறந்தீட்டுக.

உதாரணம்





3 கொடுக்கப்பட்டுள்ள பின்னத்தைத் தரப்பட்டுள்ள உருவில் நிறந்தீட்டிக் காட்டுக.

**உதாரணம் 1**




**உதாரணம் 2**






4. தரப்பட்டுள்ள உருவில் நிறந்தீட்டப்பட்டுள்ள பகுதியை வகை குறிக்கும் பின்னத்தைத் தெரிந்து அதனைச் சுற்றி வட்டமிடுக.

உதாரணம்



$\frac{1}{2}$, $\frac{1}{4}$, $\frac{2}{4}$



(i) $\frac{3}{4}$, $\frac{1}{4}$, $\frac{1}{2}$

(ii) $\frac{2}{4}$, $\frac{3}{4}$, $\frac{1}{4}$

(iii) $\frac{1}{4}$, $\frac{3}{4}$, $\frac{2}{4}$

(iv) $\frac{1}{4}$, $\frac{2}{4}$, $\frac{3}{4}$

(v) $\frac{3}{4}$, $\frac{2}{4}$, $\frac{1}{4}$

## ஒரு பொருள் தொகுதியிலிருந்து இரண்டின் பங்குகளை அறிந்து கொள்வோம்.

**உதாரணம்**

10 கொடிகளின் அரைப் பங்கில் எத்தனை கொடிகள் உண்டு?



அதாவது $10 \div 2 = 5$ 5 கொடிகள்

(5) கீழே உள்ள அட்டவணையை நிரப்புக.

| பொருளின் அளவு | | இரண்டின் ஒரு பங்கில் (அரைப் பங்கில்) உள்ள தொகை |
|---|---|---|
| 32 பொத்தான்கள் |  | ............................ |
| 14 தோடம்பழங்கள் |  | ............................ |
| 18 அன்னாசிப்பழங்கள் |  | ............................ |

6 (i) 40 வெற்றிலைகளின் அரைப் பங்கில் உள்ள வெற்றிலைகளின் எண்ணிக்கை யாது?

(ii) 58 மாபிள்களின் அரைப் பங்கில் உள்ள மாபிள்களின் எண்ணிக்கை யாது?

(iii) 62 பென்சில்களின் அரைப் பங்கில் உள்ள பென்சில்களின் எண்ணிக்கை யாது?

**ஒரு பொருள் தொகுதியிலிருந்து நான்கின் பங்குகளை அறிந்து கொள்வோம்.**

**உதாரணம்**

(i) 12 பூக்களில் $\frac{1}{4}$ இல் எத்தனை பூக்கள் உள்ளன?

(ii) 12 பூக்களில் $\frac{2}{4}$ இல் எத்தனை பூக்கள் உள்ளன?

(iii) 12 பூக்களில் $\frac{3}{4}$ இல் எத்தனை பூக்கள் உள்ளன?



(i) 12 பூக்களின் $\frac{1}{4}$, 3 பூக்கள் ஆகும். அதாவது $12 \div 4 = 3$ ஆகும்.

(ii) 12 பூக்களின் $\frac{2}{4}$ இல் உள்ள பூக்களின் எண்ணிக்கையைக் காண்போம்.

12 பூக்களின் $\frac{1}{4}$ இல் 3 பூக்கள் உள்ளதால் $\frac{2}{4}$ இல் இதன் இருமடங்கு பூக்கள் உண்டு. அதாவது $2 \times 3 = 6$ ஆகும்.

12 பூக்களின் $\frac{2}{4}$ ஆனது 6 பூக்கள் ஆகும்.

(iii) 12 பூக்களின் $\frac{3}{4}$ இல் உள்ள பூக்களின் எண்ணிக்கையைக் காண்போம்.
12 பூக்களின் $\frac{1}{4}$ இல் 3 பூக்கள் உள்ளதால் 12 பூக்களின் $\frac{3}{4}$ இல் இதன் மூன்று மடங்கு பூக்கள் உண்டு. அதாவது $3 \times 3 = 9$ ஆகும்.

12 பூக்களின் $\frac{3}{4}$ ஆனது 9 பூக்கள் ஆகும்.

7 16 நெல்லிக்காய்கள் கீழே தரப்பட்டுள்ளன.



(1) இவற்றைச் சமனான 4 குவியல்களாக வேறுபடுத்துக.

(2) 16 நெல்லிக்காய்களின் $\frac{1}{4}$ இல் எத்தனை நெல்லிக்காய்கள் உண்டு ?

(3) 16 நெல்லிக்காய்களின் $\frac{2}{4}$ இல் எத்தனை நெல்லிக்காய்கள் உண்டு ?

(4) 16 நெல்லிக்காய்களின் $\frac{3}{4}$ இல் எத்தனை நெல்லிக்காய்கள் உண்டு ?

8. (1) 8 பந்துகளின் நான்கில் மூன்று பங்குகளில் எத்தனை பந்துகள் உண்டு ?

   (2) 24 தோடம்பழங்களின் நான்கில் இரண்டு பங்குகளில் எத்தனை தோடம்பழங்கள் உண்டு ?

9. அட்டவணையை நிரப்புக.

| ஒரு குவியலில் இருந்த கொய்யாப் பழங்களின் எண்ணிக்கை | குவியலின் $\frac{1}{4}$ இல் உள்ள கொய்யாப் பழங்களின் எண்ணிக்கை | குவியலின் $\frac{2}{4}$ இல் உள்ள கொய்யாப் பழங்களின் எண்ணிக்கை | குவியலின் $\frac{3}{4}$ இல் உள்ள கொய்யாப் பழங்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|
| 20 | 5 | 10 | 15 |
| 28 | ................ | ................ | ................ |
| 32 | ................ | ................ | ................ |
| 36 | ................ | ................ | ................ |
| 40 | ................ | ................ | ................ |

**பத்தின் பங்குகளை அறிந்து கொள்வோம்.**

- கீழே காட்டப்பட்டுள்ள கடதாசிக் கீலம் சமனான 10 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.



- இதில் ஒரு பகுதியை நிறந்தீட்டும்போது அது கடதாசிக் கீலத்தின் பத்தில் ஒன்று ஆகும். இது $\frac{1}{10}$ என எழுதப்படும்.



$\frac{1}{10}$

- இரண்டு பகுதிகளை நிறந்தீட்டும்போது அது கடதாசிக் கீலத்தின் பத்தில் இரண்டு ஆகும். இது $\frac{2}{10}$ என எழுதப்படும்.



**10** கீழே தரப்பட்டுள்ள ஒவ்வோர் உருவிலும் உள்ள நிறந்தீட்டப்பட்ட பகுதிகளின் எண்ணிக்கையை முழு உருவின் பின்னமாக எழுதுக.

**உதாரணம்**



பத்தில் மூன்று

$\frac{3}{10}$

(i)



..........................................

..........................................

(ii)



..........................................

..........................................

(iii)



..........................................

..........................................

(iv)



..........................................

..........................................

**11** ஒவ்வோர் உருவிலும் நிறந்தீட்டப்பட்ட பகுதிகளின் எண்ணிக்கை முழு உருவத்தின் என்ன பின்னம் என்பதைத் தெரிந்தெடுத்து அதன் கீழே கோடிடுக.

(i) 

$\frac{1}{10}$ , $\frac{2}{10}$ , $\frac{3}{10}$

(ii) 

$\frac{6}{10}$ , $\frac{7}{10}$ , $\frac{5}{10}$

(iii) 

$\frac{8}{10}$ , $\frac{7}{10}$ , $\frac{9}{10}$

(iv) 

$\frac{2}{10}$ , $\frac{5}{10}$ , $\frac{4}{10}$

(v) 

$\frac{8}{10}$ , $\frac{9}{10}$ , $\frac{6}{10}$

# 7 பெருக்கல் I

1. பெருக்குவதன் மூலம் அட்டவணையை நிரப்புக.







| × | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|
| 1 | | | | |
| 2 | | | | 10 |
| 3 | | | | |
| 4 | | 12 | | |
| 5 | | | | |
| 6 | | | | |
| 7 | 14 | | | |
| 8 | | | | |
| 9 | | | 36 | |
| 10 | | | | |

2. பெருக்குக.

(1) $38 \times 2$

(2) $27 \times 3$

(3) $66 \times 2$

(4) $48 \times 3$

(5) $86 \times 4$

(6) $63 \times 5$

(7) $90 \times 5$

(8) $98 \times 4$

## 2 ஆலும் 3 ஆலும் பெருக்குவோம்.

**உதாரணம்**

| | | | |
|---|---|---|---|
| | 4 | 3 | 8 |
| × | | | 2 |
| | 8 | 7 | 6 |
| | | 1 | |

விடை இவ்வாறே பெறப்படுகிறது.

| | நூ | ப | ஒ | |
|---|---|---|---|---|
| | 4 | 3 | 8 | ← 400 + 30 + 8 |
| × | | | 2 | |
| | | 1 | 6 | ← முதலில் 8 ஆனது 2 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| | | 6 | 0 | ← இரண்டாவதாக 30 ஆனது 2 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| | 8 | 0 | 0 | ← மூன்றாவதாக 400 ஆனது 2 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| | 8 | 7 | 6 | ← அடுத்து 16, 60, 800 என்பன கூட்டப்பட்டுள்ளன. |

**3** பெருக்குக.

| (1) | (2) | (3) | (4) |
|---|---|---|---|
| 3 4 2 | 2 1 3 | 2 4 7 | 2 7 3 |
| × 2 | × 3 | × 2 | × 3 |
| | | | |

**4** பிரசினங்களைத் தீர்க்க.

(1) ஒரு கூடையில் 254 நாரத்தங்காய்கள் உள்ளன. இவ்வாறான இரண்டு கூடைகளில் உள்ள நாரத்தங்காய்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(2) ஒரு பெட்டியில் 142 பென்சில்கள் உண்டு. இவ்வாறான மூன்று பெட்டிகளில் உள்ள பென்சில்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(3) ஒரு பாத யாத்திரையில் கலந்து கொண்ட 439 மாணவர்களுக்கு இரண்டு பணிசு வீதம் வழங்க வேண்டியிருந்தது. தேவையான பணிசுகளின் மொத்த எண்ணிக்கை யாது?

(4) ஒரு பாத்திரத்தில் 182 தாமரைப் பூக்கள் இடப்பட்டுள்ளன. இவ்வாறான மூன்று பாத்திரங்கள் உள்ளன. இப்பாத்திரங்கள் மூன்றிலும் உள்ள தாமரைப் பூக்களின் மொத்த எண்ணிக்கை யாது ?

(5) ஒரு தொகைப் புத்தகங்களை இரண்டு பாடசாலைகளுக்கிடையே சமனாகப் பங்கிட்டபோது ஒரு பாடசாலைக்கு 480 புத்தகங்கள் கிடைத்தன. பங்கிடப்பட்ட புத்தகங்களின் மொத்த எண்ணிக்கை யாது ?

## 4 ஆலும் 5 ஆலும் பெருக்குவோம்.

**உதாரணம்**

| | | | | |
|---|---|---|---|---|
| | | 2 | 3 | 2 |
| | × | | | 4 |
| | | 9 | 2 | 8 |
| | | 1 | | |

விடை இவ்வாறே பெறப்படுகிறது.

| நூ | ப | ஒ | | |
|---|---|---|---|---|
| 2 | 3 | 2 | ← | 200 + 30 + 2 |
| | | 4 | | |
| | | 8 | ← | முதலில் 2 ஆனது 4 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 1 | 2 | 0 | ← | இரண்டாவதாக 30 ஆனது 4 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 8 | 0 | 0 | ← | மூன்றாவதாக 200 ஆனது 4 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 9 | 2 | 8 | ← | அடுத்து 8, 120, 800 என்பன கூட்டப்பட்டுள்ளன. |

**5** பெருக்குக.

(1)
$$\begin{array}{r} 124 \\ \times \quad 4 \\ \hline \\ \hline \end{array}$$

(2)
$$\begin{array}{r} 105 \\ \times \quad 5 \\ \hline \\ \hline \end{array}$$

(3)
$$\begin{array}{r} 231 \\ \times \quad 4 \\ \hline \\ \hline \end{array}$$

(4)
$$\begin{array}{r} 131 \\ \times \quad 5 \\ \hline \\ \hline \end{array}$$

(5)
$$\begin{array}{r} 310 \\ \times \quad 5 \\ \hline \\ \hline \end{array}$$

(6)
$$\begin{array}{r} 401 \\ \times \quad 4 \\ \hline \\ \hline \end{array}$$

**6** **பிரசினங்களைத் தீர்க்க.**

(1) ஒரு பேருந்தில் 58 பயணிகள் செல்லலாம். இவ்வாறான ஐந்து பேருந்துகளில் செல்லக்கூடிய பயணிகளின் மொத்த எண்ணிக்கை யாது ?

(2) ஒரு பிள்ளைக்கு நான்கு பேனைகள் வீதம் 123 பிள்ளைகளுக்கு வழங்குவதற்குத் தேவையான பேனைகளின் எண்ணிக்கை யாது ?

(3) ஒரு சாடியில் நான்கு நாற்றுகள் வீதம் 215 சாடிகளில் நடக்கூடிய நாற்றுகளின் மொத்த எண்ணிக்கை யாது ?

(4) ஒரு நிரையில் ஐந்து கதிரைகள் வைக்கப்பட்டுள்ளன. இவ்வாறான 116 நிரைகளில் வைக்கப்பட்டுள்ள கதிரைகளின் மொத்த எண்ணிக்கை யாது ?

# 8 நேரம் I




## நேரத்தை வாசிப்போம்.

1. கடிகார முகத்தில் தரப்பட்டுள்ள நேரத்தைச் சொற்களிலும் இலக்கங்களிலும் எழுதுக.

**உதாரணம்**



ஒரு மணி கடந்து இருபது நிமிடங்களாகும்.

1.20

(1) 

(2) 

(3) 

(4) 

(5) 

(6) 

**2** தரப்பட்டுள்ள நேரத்தைக் கடிகார முகத்தில் காட்டுக.

(1) 

2.00

(2) 

7.30

(3) 

3.20

(4) 

8.45

(5) 

10.40

(6) 

1.35

கடிகார முகத்தில் காட்டப்பட்டுள்ள நேரத்தைச் சில சந்தர்ப்பங்களில் இரண்டு விதங்களில் வாசிக்கலாம்.

**உதாரணம்**



கடிகாரத்தில் காட்டப்பட்டுள்ள நேரத்தை வாசிப்போம்.

- ஒன்பது கடந்து ஐம்பத்தைந்து நிமிடங்களாகும்.
- பத்து மணிக்கு ஐந்து நிமிடங்களாகும்.

**3** கடிகார முகத்தில் காட்டப்பட்டுள்ள நேரத்தை வாசிக்கக்கூடிய விதத்தை எழுதுக.

(1)



- ஒன்று கடந்து நாற்பது நிமிடங்களாகும்.
- ..............................................................

(2)



- ..............................................................
- ஐந்துக்குப் பத்து நிமிடங்களாகும்.

(3)



- ..............................................................
- எட்டுக்கு ஐந்து நிமிடங்களாகும்.

(4)



- ..............................................................
- பத்துக்குப் பத்து நிமிடங்களாகும்.

(5)



- ஐந்து கடந்து ஐம்பத்தைந்து நிமிடங்களாகும்.
- ..............................................................



நள்ளிரவு 12



நண்பகல் 12

நள்ளிரவு 12 இற்கும் நண்பகல் 12 இற்கும் இடைப் பட்ட காலம் முற்பகல் எனப்படும். இது மு.ப. எனச் சுருக்கமாகக் காட்டப்படும்.



நண்பகல் 12



நள்ளிரவு 12

நண்பகல் 12 இற்கும் நள்ளிரவு 12 இற்கும் இடைப்பட்ட காலம் பிற்பகல் எனப்படும். இது பி.ப. எனச் சுருக்கமாகக் காட்டப்படும்.

**4** **கீழே தரப்பட்டுள்ள ஒவ்வொரு நேரத்தையும் முற்பகல் எனவும் பிற்பகல் எனவும் குறித்து மீண்டும் எழுதுக.**

**உதாரணம்**

பாடசாலை காலை 7.30 இற்குத் தொடங்கும் - மு.ப. 7.30
பாடசாலை பகல் 1.30 இற்கு முடியும் - பி.ப. 1.30

(1) ஒரு வங்கியில் கொடுக்கல் வாங்கல்கள் மாலை 3.00 இற்கு முடிவடையும்.

(2) வைத்தியப் பரிசோதனை முகாம் காலை 9.00 இற்கு ஆரம்பமாகும்.

(3) மிருகக்காட்சிச்சாலையைப் பார்வையிடுவது மாலை 5.00 இற்கு முடிவடையும்.

(4) காலியில் இருந்து புறப்படும் அலுவலகப் புகையிரதம் காலை 7.45 இற்குக் கொழும்புக் கோட்டைப் புகையிரத நிலையத்தை வந்து அடையும்.

24 மணித்தியாலக் கடிகாரத்தில் நேரத்தை வாசிப்போம்.




பாடசாலை மு.ப. 7.30 இற்கு ஆரம்பிக்கின்றது. இந்நேரம் 24 மணித்தியாலக் கடிகாரத்தில் 07:30 என எழுதப்படும்.




பாடசாலை பி.ப 1.30 இற்கு முடிவடைகின்றது. இந்நேரம் 24 மணித்தியாலக் கடிகாரத்தில் 13:30 என எழுதப்படும்.

12 மணித்தியாலக் கடிகாரத்தின் நேரத்தை 24 மணித்தியாலக் கடிகாரத்தில் காட்டும்போது பிற்பகல் நேரங்களுக்கு 12 மணித்தியாலம் கூட்டப்படும்.

5. 12 மணித்தியாலக் கடிகாரத்தின் நேரத்தை 24 மணித்தியாலக் கடிகார நேரத்தில் எழுதுக.

| 12 **மணித்தியாலக் கடிகார நேரம்** | 24 **மணித்தியாலக் கடிகார நேரம்** |
|---|---|
| மு.ப. 10.45 | 10:45 |
| பி.ப. 9.40 | 21:40 |
| மு.ப. 4.15 | ........................ |
| மு.ப. 11.00 | ........................ |
| பி.ப. 3.20 | ........................ |
| பி.ப. 10.00 | ........................ |

6. 24 மணித்தியாலக் கடிகாரத்தின் நேரத்தை 12 மணித்தியாலக் கடிகார நேரத்தில் எழுதுக.

| 24 **மணித்தியாலக் கடிகார நேரம்** | 12 **மணித்தியாலக் கடிகார நேரம்** |
|---|---|
| 07:55 | மு.ப. 7.55 |
| 18:00 | பி.ப. 6.00 |
| 02:20 | ........................ |
| 11:10 | ........................ |
| 16:45 | ........................ |
| 23:05 | ........................ |

# 9 வகுத்தல் I

**நெடும் வகுத்தல் முறையில் பிரசினங்களைத் தீர்ப்போம்.**

**உதாரணம் 1**

(i) 48 பென்சில்களை ஒரு பிள்ளைக்கு 3 வீதம் எத்தனை பிள்ளைகளுக்கு வழங்கலாம்?

(ii) 50 பென்சில்களை ஒரு பிள்ளைக்கு 4 வீதம் எத்தனை பிள்ளைகளுக்கு வழங்கலாம்? எத்தனை பென்சில்கள் மீதியாகும்?

(i)

$$\begin{array}{r|l} & 16 \\ \hline 3 & 48 \\ & \underline{3} \\ & 18 \\ & \underline{18} \\ & \ \ 0 \end{array}$$

$48 \div 3 = 16$

வழங்கப்படக்கூடிய பிள்ளைகளின் எண்ணிக்கை $= 16$

(ii)

$$\begin{array}{r|l} & 12 \\ \hline 4 & 50 \\ & \underline{4} \\ & 10 \\ & \underline{\ 8} \\ & \ \ 2 \end{array}$$

$50 \div 4 = 12$ மீதி 2

வழங்கப்படக்கூடிய பிள்ளைகளின் எண்ணிக்கை = 12

மீதிப் பென்சில்களின் எண்ணிக்கை = 2

**உதாரணம் 2**

570 புத்தகங்களை நான்கு வகுப்புகளுக்குச் சமனாகப் பகிரும்போது ஒரு வகுப்புக்கு எத்தனை புத்தகங்கள் கிடைக்கும்? எத்தனை புத்தகங்கள் மீதியாகும்?

$$\begin{array}{r|l} & 142 \\ \hline 4 & 570 \\ & \underline{4} \\ & 17 \\ & \underline{16} \\ & \ \ 10 \\ & \ \ \ \underline{8} \\ & \ \ \ 2 \end{array}$$

$570 \div 4 = 142$ மீதி 2

ஒரு வகுப்புக்குக் கிடைக்கும் புத்தகங்களின் எண்ணிக்கை = 142

மீதிப் புத்தகங்களின் எண்ணிக்கை = 2

## 1 பிரசினங்களைத் தீர்க்க.

(1) 89 மாங்காய்களை இரண்டு பெட்டிகளில் சமனாக இடும்போது ஒரு பெட்டியில் இருக்கும் மாங்காய்களின் எண்ணிக்கை யாது? எத்தனை மாங்காய்கள் மீதியாகும்?

(2) (i) 92 புத்தகங்களை ஒருவருக்கு நான்கு வீதம் எத்தனை பேருக்கு வழங்கலாம்?

(ii) இதே தொகைப் புத்தகங்களை ஒருவருக்கு மூன்று வீதம் எத்தனை பேருக்கு வழங்கலாம்? மீதியாகும் புத்தகங்களின் எண்ணிக்கை யாது?

(3) ஒரு விழா மண்டபத்தில் உள்ள 95 கதிரைகளை ஒரு மேசைக்கு நான்கு கதிரைகள் வீதம் எத்தனை மேசைகளுக்கு வைக்கலாம்? மீதியாகும் கதிரைகளின் எண்ணிக்கை யாது?

## 2 பிரசினங்களைத் தீர்க்க.

(1) ஆசிரியை 425 பேனைகளை ஒரு பிள்ளைக்கு மூன்று பேனைகள் வீதம் பகிர்ந்தளித்தார்.

(i) பேனைகளைப் பெற்றுக் கொண்ட பிள்ளைகளின் எண்ணிக்கை யாது?

(ii) மீதிப் பேனைகளின் எண்ணிக்கை யாது?

(2) ஒரு மண்டபத்தை அலங்கரிப்பதற்கு 417 பலூன்கள் வழங்கப் பட்டுள்ளன.

(i) இரண்டு பலூன்கள் வீதம் எத்தனை கொத்துகளைச் செய்யலாம்? எத்தனை பலூன்கள் மீதியாகும்?

(ii) மூன்று பலூன்கள் வீதம் எத்தனை கொத்துகளைச் செய்யலாம்?

(iii) நான்கு பலூன்கள் வீதம் எத்தனை கொத்துகளைச் செய்யலாம்? எத்தனை பலூன்கள் மீதியாகும்?

## 4 பிரசினத்தைத் தீர்க்க.

**உதாரணம்**

ஒரு கூரையை அமைப்பதற்கு 1 m 50 cm நீளமுள்ள 4 மரத் தீராந்திகள் தேவைப்பட்டன. அதற்குத் தேவையான மரத் தீராந்திகளின் மொத்த நீளம் யாது?

| | m | cm |
|---|---|---|
| | 1 | 50 |
| × | | 4 |
| | 6 | 00 |

மரத் தீராந்திகளின் மொத்த நீளம் 6 m ஆகும்.

(1) ஒரு விளையாட்டின்போது தம்பி பாய்ந்த தூரம் 1 m 30 cm ஆகும். அக்கா அத்தூரத்தின் இரண்டு மடங்கைப் பாய்ந்தாள் எனின், அவள் பாய்ந்த தூரம் யாது?

(2) ஒரு கதிரை உறையைத் தைப்பதற்கு 2 m 25 cm நீளமுள்ள துணி தேவையாகும். இவ்வாறான 4 கதிரைகளுக்கு உறையைத் தைப்பதற்குத் தேவையான துணியின் நீளம் யாது?

(3) மின்குமிழ்ச் சரம் ஒன்றின் நீளம் 5 m 50 cm ஆகும். இவ்வாறான 3 மின்குமிழ்ச் சரங்களின் மொத்த நீளம் யாது?

(4) ஒரு முட்கம்பி வேலி சம நீளமுள்ள 5 நிரைகளைக் கொண்டது. ஒரு நிரைக் கம்பியின் நீளம் 250 m 20 cm எனின், வேலியில் உள்ள கம்பியின் மொத்த நீளம் யாது?

5 வகுக்க.

**உதாரணம்**

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | 4 | 0 | m | | 2 | 1 | cm | |
| | 3 | 1 | 2 | 0 | m | | 6 | 3 | cm | |
| | | 1 | 2 | | | | | | | |
| | | | 0 | 0 | | | | | | |
| | | | | 0 | | | | | | |
| | | | | 0 | | | 6 | | | |
| | | | | | | | 6 | | | |
| | | | | | | | 0 | 3 | | |
| | | | | | | | | 3 | | |
| | | | | | | | | 0 | | |

விடை 40 m 21 cm

(1) 2 | 6 m 36 cm

(2) 5 | 75 m 15 cm

(3) 4 | 64 m 36 cm

(4) 4 | 128 m 36 cm

(5) 3 | 201 m 51 cm

**உதாரணம்**

அம்மா கதவுச்சீலையைத் தைப்பதற்காக 8 m 80 cm நீளமுள்ள ஒரு துணியை வாங்கி வந்தார். அவர் அதனைச் சம நீளமுள்ள நான்கு துண்டுகளாக வெட்டினார். ஒரு துண்டின் நீளம் யாது?

```
      2 m   20 cm
  4 | 8 m   80 cm
    | 8
      0      8
             8
            00
             0
             0
```

ஒரு துண்டின் நீளம் 2 m 20 cm ஆகும்.

6 **பிரசினத்தைத் தீர்க்க.**

(1) 15 m 75 cm நீளமுள்ள ஒரு கயிறு 5 சம துண்டுகளாக வெட்டப்பட்டது. ஒரு துண்டுக் கயிற்றின் நீளம் யாது?

(2) ஒரு மேசையின் நீளம் அதன் அகலத்தின் இரு மடங்காகும். அதன் நீளம் 4 m 60 cm ஆயின், மேசையின் அகலம் யாது?

(3) 16 m 48 cm நீளமுள்ள மெழுகுச் சீலை ஒன்று மேசை விரிப்புக் காகச் சம நீளமுள்ள 4 துண்டுகளாக வெட்டப்பட்டது. ஒரு துண்டின் நீளம் யாது?

(4) ஓர் அறிவித்தற் பலகையின் நீளம் 6 m 45 cm ஆகும். இதன் நீளம் அகலத்தின் மூன்று மடங்காகும் எனின், அதன் அகலம் யாது?

# 20 பணம் II

**1** விடை எழுதுக.

ஒரு நகரம் $P$ இலிருந்து வேறு சில நகரங்களுக்குச் செல்வதற்கு வயது வந்தோர் பேருந்துக் கட்டணமாகச் செலுத்த வேண்டிய பணம் கீழே தரப்பட்டுள்ளது.

| நகரம் | பேருந்துக் கட்டணம் | |
|---|---|---|
| | ரூபாய் | சதம் |
| $A$ | 14 | 00 |
| $B$ | 24 | 00 |
| $C$ | 38 | 00 |
| $D$ | 66 | 00 |

**( ஒரு வயது வந்தோருக்கான கட்டணத்தில் அரைவாசியை ஒரு பிள்ளைக்கான பேருந்துக் கட்டணமாகச் செலுத்த வேண்டும்.)**

**உதாரணம்**

நகரம் $P$ இலிருந்து நகரம் $B$ இற்குச் செல்வதற்கு 5 வயதுவந்தோரும் 3 பிள்ளைகளும் ஒரு பேருந்தில் ஏறினர்.

(i) வயதுவந்தோர் பேருந்துக் கட்டணமாகச் செலுத்த வேண்டிய பணம் யாது ?

(ii) பிள்ளைகள் பேருந்துக் கட்டணமாகச் செலுத்த வேண்டிய பணம் யாது ?

(iii) அவர்கள் அனைவரும் செலுத்த வேண்டிய மொத்தப் பணம் யாது ?

(i)

| | ரூபாய் | சதம் |
|---|---|---|
| | 24 | 00 |
| × | | 5 |
| | 120 | 00 |

வயதுவந்தோர் பேருந்துக் கட்டணமாகச் செலுத்த வேண்டிய பணம் 120 ரூபாய் ஆகும்.

(ii) ஒரு பிள்ளைக்கான பேருந்துக் கட்டணம் = 24 ரூபாய் ÷ 2

= 12 ரூபாய்

| ரூபாய் | சதம் |
|---|---|
| 12 | 00 |
| × | 3 |
| 36 | 00 |

3 பிள்ளைகளுக்கான பேருந்துக் கட்டணமாகச் செலுத்த வேண்டிய பணம் 36 ரூபாய் ஆகும்.

(iii)

| ரூபாய் | சதம் |
|---|---|
| 120 | 00 |
| + 36 | 00 |
| 156 | 00 |

பேருந்துக் கட்டணமாகச் செலுத்த வேண்டிய மொத்தப் பணம் 156 ரூபாய் ஆகும்.

(1) நகரம் $P$ இலிருந்து நகரம் $D$ இற்குச் செல்வதற்கு வயது வந்தோர் நால்வரும் இரு பிள்ளைகளும் பேருந்தில் ஏறினர். அவர்கள் அனைவரும் செலுத்த வேண்டிய மொத்தப் பேருந்துக் கட்டணம் யாது?

(2) நகரம் $P$ இலிருந்து நகரம் $C$ இற்குச் செல்வதற்கு வயது வந்தோர் ஐவரும் நான்கு பிள்ளைகளும் பேருந்தில் ஏறினர். அவர்கள் அனைவரும் செலுத்த வேண்டிய மொத்தப் பேருந்துக் கட்டணம் யாது?

(3) வயதுவந்தோர் ஐவர் நகரம் $P$ இலிருந்து நகரம் $A$ இற்குச் சென்று மீண்டும் நகரம் $P$ இற்குத் திரும்பி வந்தால், அவர்கள் பேருந்துக் கட்டணமாகச் செலுத்த வேண்டிய மொத்தப் பணம் யாது?

2 ஒரு கடையில் இருந்த விலைப்பட்டியல் கிழே தரப்பட்டுள்ளது.

| விலைப்பட்டியல் | |
|---|---|
| பேனை | ரூ. 12.00 |
| கத்தரிக்கோல் | ரூ. 55.00 |
| பிசின் போத்தல் | ரூ. 80.00 |
| வர்ணப் பென்சிற் பெட்டி | ரூ. 98.00 |
| வரைகோல் | ரூ. 30.00 |

(1) மேலே குறிப்பிட்ட விலைப்பட்டியலைப் பார்த்துக் கீழேயுள்ள பொருள்களுக்கான சிட்டைகளை நிரப்புக.

(i)

| **பொருள்** | **வாங்கிய எண்ணிக்கை** | **செலுத்த வேண்டிய பணம்** | |
|---|---|---|---|
| | | **ரூபாய்** | **சதம்** |
| வர்ணப் பென்சிற் பெட்டி | 3 | ........... | ...... |
| பிசின் போத்தல் | 2 | ........... | ...... |
| **மொத்தப் பணம்** | | ........... | ...... |

(ii)

| **பொருள்** | **வாங்கிய எண்ணிக்கை** | **செலுத்த வேண்டிய பணம்** | |
|---|---|---|---|
| | | **ரூபாய்** | **சதம்** |
| பேனை | 4 | ........... | ...... |
| வரைகோல் | 3 | ........... | ...... |
| கத்தரிக்கோல் | 5 | ........... | ...... |
| **மொத்தப் பணம்** | | ........... | ...... |

(2) சிட்டையை நிரப்புக.

(i)

| பொருள் | வாங்கிய எண்ணிக்கை | அலகு விலை | | செலுத்த வேண்டிய பணம் | |
|---|---|---|---|---|---|
| | | ரூபாய் | சதம் | ரூபாய் | சதம் |
| பேனை | 3 | 12 | 00 | ......... | ......... |
| வரைகோல் | 4 | 30 | 00 | ......... | ......... |
| பிசின் போத்தல் | 5 | 80 | 00 | ......... | ......... |
| **மொத்தப் பணம்** | | | | ......... | ......... |

(ii)

| பொருள் | வாங்கிய எண்ணிக்கை | அலகு விலை | | செலுத்த வேண்டிய பணம் | |
|---|---|---|---|---|---|
| | | ரூபாய் | சதம் | ரூபாய் | சதம் |
| கத்தரிக்கோல் | 3 | 55 | 00 | ......... | ......... |
| வர்ணப் பென்சிற் பெட்டி | 5 | 98 | 00 | ......... | ......... |
| **மொத்தப் பணம்** | | | | ......... | ......... |

3 ஒரு கடையில் இருந்த விலைப்பட்டியல் கீழே தரப்பட்டுள்ளது. அதனைக் கொண்டு பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

| பொருள் | 1 kg இன் விலை | |
|---|---|---|
| | ரூபாய் | சதம் |
| நெத்தலிக் கருவாடு | 900 | 00 |
| அரிசி | 85 | 00 |
| பயறு | 220 | 00 |
| உருளைக்கிழங்கு | 300 | 00 |
| கடலை | 260 | 00 |
| தேயிலை | 920 | 00 |

(1) விலைப்பட்டியலைப் பார்த்துச் சிட்டையை நிரப்புக.

| பொருள் | வாங்கிய அளவு | 1 kg இன் விலை | | செலுத்த வேண்டிய பணம் | |
|---|---|---|---|---|---|
| | | ரூபாய் | சதம் | ரூபாய் | சதம் |
| அரிசி | 2 kg | 85 | 00 | ............ | ....... |
| கடலை | 500 g | 260 | 00 | ............ | ....... |
| உருளைக்கிழங்கு | 1 kg 500 g | 300 | 00 | ............ | ....... |
| **மொத்தப் பணம்** | | | | ............ | ..... |

சிட்டைக்கான பணத்தைச் செலுத்துவதற்கு 800 ரூபாயைக் கொடுக்கும்போது கிடைக்கும் மீதிப் பணம் யாது?

(2) தாயார் 2 kg பயறையும் 200 g நெத்தலிக்கருவாட்டையும் 250 g தேயிலையையும் வாங்கினார். அதற்குரிய சிட்டையைத் தயாரிக்க. இப்பொருள்களை வாங்குகையில் 1000 ரூபாயைக் கொடுக்கும்போது கிடைக்கும் மீதிப் பணத்தைக் காண்க.

# 21 பெருக்கல் II

## ஆறின் பெருக்கல் வாய்பாட்டை உருவாக்குவோம்.



$1 \times 6 = 6$

ஒன்று தரம் ஆறு ஆறு



$6 + 6 = 12$

$2 \times 6 = 12$

இரண்டு தரம் ஆறு பன்னிரண்டு



$6 + 6 + 6 = 18$

$3 \times 6 = 18$

மூன்று தரம் ஆறு பதினெட்டு



$6 + 6 + 6 + 6 = 24$

$4 \times 6 = 24$

நான்கு தரம் ஆறு இருபத்து நான்கு



$6 + 6 + 6 + 6 + 6 = 30$

$5 \times 6 = 30$

ஐந்து தரம் ஆறு முப்பது



$6 + 6 + 6 + 6 + 6 + 6 = 36$

$6 \times 6 = 36$

ஆறு தரம் ஆறு முப்பத்தாறு



$6 + 6 + 6 + 6 + 6 + 6 + 6 = 42$

$7 \times 6 = 42$

ஏழு தரம் ஆறு நாற்பத்திரண்டு



$6 + 6 + 6 + 6 + 6 + 6 + 6 + 6 = 48$

$8 \times 6 = 48$

எட்டு தரம் ஆறு நாற்பத்தெட்டு



$6 + 6 + 6 + 6 + 6 + 6 + 6 + 6 + 6 = 54$

$9 \times 6 = 54$

ஒன்பது தரம் ஆறு ஐம்பத்து நான்கு



$6 + 6 + 6 + 6 + 6 + 6 + 6 + 6 + 6 + 6 = 60$

$10 \times 6 = 60$

பத்து தரம் ஆறு அறுபது

1. ஆறின் பெருக்கல் வாய்பாட்டைக் கொண்டு வெற்றிடங்களை நிரப்புக.

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | 1 | × .... | = | 6 | | (6) | .... | × .... | = | 36 |
| (2) | 2 | × 6 | = | 12 | | (7) | 7 | × .... | = | 42 |
| (3) | .... | × 6 | = | 18 | | (8) | .... | × 6 | = | 48 |
| (4) | 4 | × .... | = | 24 | | (9) | 9 | × 6 | = | ..... |
| (5) | .... | × 6 | = | 30 | | (10) | .... | × .... | = | 60 |

## 6 ஆல் பெருக்குவோம்.

**உதாரணம்**

| | | | | |
|---|---|---|---|---|
| | 4 | 2 | 3 | |
| × | | | 6 | |
| 2 | 5 | 3 | 8 | |

விடை இவ்வாறே பெறப்படுகிறது.

| ஆ | நூ | ப | ஒ | |
|---|---|---|---|---|
| | 4 | 2 | 3 | ← 400 + 20 + 3 |
| × | | | 6 | |
| | | 1 | 8 | ← முதலில் 3 ஆனது 6 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| | 1 | 2 | 0 | ← இரண்டாவதாக 20 ஆனது 6 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 2 | 4 | 0 | 0 | ← மூன்றாவதாக 400 ஆனது 6 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 2 | 5 | 3 | 8 | ← பின்னர் 18, 120, 2400 என்பன கூட்டப்பட்டுள்ளன. |

## 2 பெருக்குக.

| | | | |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| 4 2<br>× 6 | 3 5<br>× 6 | 1 0<br>× 6 | 6 9<br>× 6 |
| (5) | (6) | (7) | (8) |
| 5 0<br>× 6 | 8 7<br>× 6 | 1 0 0<br>× 6 | 9 0 4<br>× 6 |
| (9) | (10) | (11) | (12) |
| 2 6 0<br>× 6 | 7 8 1<br>× 6 | 8 0 0<br>× 6 | 5 0 5<br>× 6 |

## 3 பிரசினங்களைத் தீர்க்க.

(1) ஒரு குழுவில் 6 பிள்ளைகள் வீதம் 25 குழுவில் உள்ள பிள்ளைகளின் எண்ணிக்கை யாது ?

(2) ஓர் அணிவகுப்புக் காட்சியில் ஒரு நிரையில் ஆறு பிள்ளைகள் வீதம் 32 நிரைகள் உண்டு. அணிவகுப்புக் காட்சியில் நிற்கும் பிள்ளைகளின் மொத்த எண்ணிக்கை யாது ?

(3) ஒரு பைக்கற்றில் 125 தாள்கள் வீதம் உண்டு. இவ்வாறான ஆறு பைக்கற்றுகளில் உள்ள வர்ணத் தாள்களின் மொத்த எண்ணிக்கை யாது ?

(4) ஒரு பெட்டியில் 6 வர்ணப் பென்சில்கள் வீதம் உண்டு. இவ்வாறான 206 பெட்டிகளில் உள்ள வர்ணப் பென்சில்களின் மொத்த எண்ணிக்கை யாது ?

ஏழின் பெருக்கல் வாய்பாட்டை உருவாக்குவோம்.



$1 \times 7 = 7$

**ஒன்று தரம் ஏழு** ஏழு



$7 + 7 = 14$

$2 \times 7 = 14$

**இரண்டு தரம் ஏழு** பதினான்கு



$7 + 7 + 7 = 21$

$3 \times 7 = 21$

**மூன்று தரம் ஏழு** இருபத்தொன்று



$7 + 7 + 7 + 7 = 28$

$4 \times 7 = 28$

**நான்கு தரம் ஏழு** இருபத்தெட்டு



$7 + 7 + 7 + 7 + 7 = 35$

$5 \times 7 = 35$

**ஐந்து தரம் ஏழு** முப்பத்தைந்து



$7 + 7 + 7 + 7 + 7 + 7 = 42$

$6 \times 7 = 42$

**ஆறு தரம் ஏழு** நாற்பத்திரண்டு



$7 + 7 + 7 + 7 + 7 + 7 + 7 = 49$

$7 \times 7 = 49$

**ஏழு தரம் ஏழு** நாற்பத்தொன்பது



$7 + 7 + 7 + 7 + 7 + 7 + 7 + 7 = 56$

$8 \times 7 = 56$

**எட்டு தரம் ஏழு** ஐம்பத்தாறு



$7 + 7 + 7 + 7 + 7 + 7 + 7 + 7 + 7 = 63$

$9 \times 7 = 63$

**ஒன்பது தரம் ஏழு** அறுபத்து மூன்று



$7 + 7 + 7 + 7 + 7 + 7 + 7 + 7 + 7 + 7 = 70$

$10 \times 7 = 70$

**பத்து தரம் ஏழு** எழுபது

4. ஏழின் பெருக்கல் வாய்பாட்டைக் கொண்டு வெற்றிடங்களை நிரப்புக.

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | .... | × | 7 | = 7 | | (6) | 6 | × | .... | = 42 |
| (2) | 2 | × | .... | = 14 | | (7) | .... | × | 7 | = 49 |
| (3) | 3 | × | .... | = 21 | | (8) | .... | × | .... | = 56 |
| (4) | ..... | × | 7 | = ..... | | (9) | .... | × | 7 | = .... |
| (5) | 5 | × | .... | = 35 | | (10) | .... | × | .... | = 70 |

## 7 ஆல் பெருக்குவோம்.

**உதாரணம்**

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | |
| | | 2 | 5 | 3 |
| | × | | | 7 |
| | 1 | 7 | 7 | 1 |
| | | | | |

விடை இவ்வாறே பெறப்படுகிறது.

| ஆ | நூ | ப | ஒ | |
|---|---|---|---|---|
| | 2 | 5 | 3 | ← 200 + 50 + 3 |
| × | | | 7 | |
| | | 2 | 1 | ← முதலில் 3 ஆனது 7 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| | 3 | 5 | 0 | ← இரண்டாவதாக 50 ஆனது 7 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 1 | 4 | 0 | 0 | ← மூன்றாவதாக 200 ஆனது 7 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 1 | 7 | 7 | 1 | ← பின்னர் 21, 350, 1400 என்பன கூட்டப்பட்டுள்ளன. |

5. பெருக்குக.

| (1) | (2) | (3) | (4) |
|---|---|---|---|
| 2 1 | 1 0 | 3 4 | 6 5 |
| × 7 | × 7 | × 7 | × 7 |

| (5) | (6) | (7) | (8) |
|---|---|---|---|
| 7 0 | 8 9 | 5 0 1 | 9 4 4 |
| × 7 | × 7 | × 7 | × 7 |

| (9) | (10) | (11) | (12) |
|---|---|---|---|
| 1 0 0 | 8 1 3 | 3 3 3 | 7 0 7 |
| × 7 | × 7 | × 7 | × 7 |

6. புதிரை நிரப்புக.




**இடமிருந்து வலமாக** →

A 7 முச்சக்கரவண்டிகளில் உள்ள சில்லுகளின் எண்ணிக்கை

B 204 ஐ 7 ஆல் பெருக்கும்போது பெறப்படும் விடை

C 9 ஐ 7 ஆல் பெருக்கும்போது பெறப்படும் விடை

**மேலிருந்து கீழாக** ↓

A 31 ஐ 7 ஆல் பெருக்கும்போது பெறப்படும் விடை

B 27 ஐ 7 ஆல் பெருக்கும்போது பெறப்படும் விடை

C 34 ஐ 7 ஆல் பெருக்கும்போது பெறப்படும் விடை

7 பிரசினங்களைத் தீர்க்க.

(1) 42 வாரங்களில் உள்ள நாட்களின் எண்ணிக்கை யாது?

(2) ஒரு விடுதியில் ஓர் அறையில் 7 மாணவர்கள் தங்கலாம். விடுதியில் இவ்வாறான 18 அறைகள் உள்ளன. இங்கு தங்கக்கூடிய மாணவர்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(3) ஒரு வலைப்பந்தாட்டக் குழுவில் உள்ள வீராங்கனைகளின் எண்ணிக்கை 7 ஆகும். இவ்வாறான 107 குழுக்கள் கலந்து கொண்ட ஒரு வலைப்பந்தாட்டச் சுற்றுப்போட்டியில் பங்கு பற்றிய வீராங்கனைகளின் மொத்த எண்ணிக்கை யாது?

(4) ஒரு லொறியின் மூலம் ஒரு தடவையில் 790 செங்கற்களைக் கொண்டு செல்லலாம். இவ்வாறாக 7 தடவைகளில் கொண்டு செல்லக்கூடிய செங்கற்களின் மொத்த எண்ணிக்கை யாது?

# 22 நேரம் II

## செலவிடப்பட்ட நேரத்தைக் காண்போம்.

### உதாரணம் 1

ஒரு பேருந்து மு.ப. 3.45 இற்குக் குருணாகலிலிருந்து புறப்பட்டு மு.ப. 8.00 இற்குக் கொழும்புக் கோட்டையில் பயணத்தை முடித்துக் கொண்டது. பயணத்துக்காகச் செலவிடப்பட்ட நேரம் எவ்வளவு?



புறப்பட்ட நேரம்



முடித்த நேரம்

பயணத்தை முடித்த நேரம் = மு.ப. 8.00
பயணத்தை ஆரம்பித்த நேரம் = மு.ப. 3.45

| மணி | நிமிடம் |
|---|---|
| ~~8~~ 7 | 00 |
| − 3 | 45 |
| 4 | 15 |

- ஒரு மணித்தியாலம் நிமிட நிரலுக்குக் கொண்டு செல்லப்பட்டது. அப்போது நிமிட நிரலில் 60 உம் மணித்தியால நிரலில் 7 உம் ஆகும்.
- இனி, 60 நிமிடங்களிலிருந்து 45 நிமிடங்களைக் கழிக்கும் போது 15 நிமிடங்கள் பெறப்படும்.
- 7 மணித்தியாலங்களில் 3 மணித்தியாலங்களைக் கழிக்கும் போது 4 மணித்தியாலங்கள் பெறப்படும்.

பயணத்துக்காக செலவிடப்பட்ட நேரம் (காலம்) 4 மணித்தியாலங்களும் 15 நிமிடங்களும் ஆகும்.

**1** பிரசினத்தைத் தீர்க்க.

(1) அப்பா மு.ப. 6.45 இற்கு வீட்டிலிருந்து புறப்பட்டு மு.ப. 8.15 இற்கு அலுவலகத்தை அடைந்தார். அப்பா அலுவலகத்துக்குச் செல்வதற்குச் செலவிட்ட நேரத்தைக் காண்க.

(2) அக்கா பி.ப. 2.45 இற்கு ஒரு சட்டையைத் தைக்கத் தொடங்கிப் பி.ப. 5.30 இற்கு அதனைத் தைத்து முடித்தார். அவர் அதனைத் தைத்து முடிப்பதற்கு எடுத்த நேரம் யாது?

(3) அலுவலகப் புகையிரதம் மு.ப. 4.50 இற்கு மகோப் புகையிரத நிலையத்திலிருந்து அதன் பயணத்தை ஆரம்பித்து மு.ப. 8.35 இற்குக் கொழும்புக் கோட்டையை வந்தடைந்தது. அதன் பயணத் திற்கு எடுத்த நேரம் யாது?

### உதாரணம் 2

அம்மா மு.ப. 11.30 இற்குப் பகல் உணவைச் சமைக்கத் தொடங்கினார். அவர் பி.ப. 1.10 இற்கு உணவு சமைப்பதை நிறைவு செய்தார். உணவு சமைப்பதற்குச் செலவிடப்பட்ட நேரம் எவ்வளவு?

இங்கு தொடங்கிய நேரம் முற்பகலும் நிறைவு செய்த நேரம் பிற்பகலும் ஆகும். எனவே இரண்டு நேரங்களுக்குமிடையிலான வித்தியாசத்தைக் காண்பதற்கு முதலில் அவற்றை 24 மணித்தியாலக் கடிகாரத்துக்கேற்ப எழுதிக்கொள்வோம்.

| | |
|---|---|
| உணவைச் சமைக்கத் தொடங்கிய நேரம் | = மு.ப. 11.30 |
| | = 11:30 |
| உணவு சமைப்பதை நிறைவு செய்த நேரம் | = பி.ப. 1.10 |
| | = 13:10 |

| | மணி | நிமிடம் |
|---|---|---|
| | 13 | 10 |
| − | 11 | 30 |
| | 1 | 40 |

உணவைச் சமைப்பதற்குச் செலவிடப்பட்ட நேரம் 1 மணித்தியாலமும் 40 நிமிடங்களும் ஆகும்.

**2** **பிரசினத்தைத் தீர்க்க.**

(1) மு.ப. 7.30 இற்குப் பாடசாலை ஆரம்பமாகிப் பி.ப. 1.30 இற்கு முடிவடைந்ததாயின், பாடசாலை நடத்தப்பட்ட நேரம் எவ்வளவு?

(2) ஒரு விளையாட்டுக் குழுவினர் மு.ப. 8.35 இற்குத் தமது பயிற்சியைத் தொடங்கினர். அவர்கள் பி.ப. 2.15 இற்குப் பயிற்சியை முடித்தனர். பயிற்சி நடவடிக்கைகளுக்காக அவர்கள் செலவிட்ட நேரத்தைக் காண்க.

(3) ஒரு வயலில் மு.ப. 8.45 இற்குத் தொடங்கிய நெல் அறுவடை பி.ப. 4.30 இற்கு முடிவடைந்தது. நெல் அறுவடைக்காகச் செலவிடப்பட்ட நேரத்தைக் காண்க.

(4) ஒரு சுற்றாடற் பாசறை மு.ப. 9.30 இற்கு ஆரம்பமாகிப் பி.ப. 2.10 இற்கு முடிவடைந்தது. அது நடத்தப்பட்ட நேரம் எவ்வளவு?

## நேரத்தைக் கணிப்போம்.

### உதாரணம் 1

மு.ப. 4.20 இற்குப் படிக்கத் தொடங்கிய அண்ணா 2 மணித்தியாலங்கள் 50 நிமிடங்களின் பின்னர் படிப்பை நிறுத்தினார். படிப்பை நிறுத்திய நேரம் யாது?

படிக்கத் தொடங்கிய நேரம் = மு.ப. 4.20

செலவு செய்த நேரம் = 2 மணித்தியாலங்கள் 50 நிமிடங்கள்

| | மணி | நிமிடம் |
|---|---|---|
| | 4 | 20 |
| + | 2 | 50 |
| | 7 | 10 |

நிமிட நிரலில் 20 ஐயும் 50 ஐயும் கூட்டும்போது 70 நிமிடம் ஆகும்.
அதில் 1 மணித்தியாலமும் 10 நிமிடமும் உண்டு. நிமிட நிரலில் 10 ஐ எழுதி மணித்தியால நிரலுக்கு 1 மணித்தியாலம் கொண்டு செல்லப்படும். அப்போது மணித்தியால நிரலில் 7 பெறப்படும்.

படிப்பை நிறுத்திய நேரம் மு.ப. 7.10 ஆகும்.

## 3 பிரசினங்களைத் தீர்க்க.

(1) ஆரம்பப் பிரிவின் சிறுவர் சந்தை மு.ப. 8.15 இற்கு ஆரம்பமாகி 3 மணித்தியாலங்கள் 30 நிமிடங்களின் பின்னர் முடிவடைந்தது. சிறுவர் சந்தை முடிவடைந்த நேரம் யாது?

(2) பாடசாலையில் ஒரு நாடகக் காட்சி மு.ப. 9.35 இற்குத் தொடங்கி 2 மணித்தியாலங்கள் 45 நிமிடங்களில் முடிவடைந்தது. நாடகக் காட்சி முடிவடைந்த நேரம் யாது?

(3) பி.ப. 5.32 இற்குத் தொடங்கிய மழை 3 மணித்தியாலங்கள் 45 நிமிடங்களின் பின்னர் ஓய்ந்தது. மழை ஓய்ந்த நேரம் யாது?

## 4 பிரசினங்களைத் தீர்க்க.

### உதாரணம் 2

இரத்மலானை விமான நிலையத்திலிருந்து புறப்பட்ட ஒரு விமானம் 26 நிமிடங்களின் பின்னர் மு.ப. 9.16 இற்குப் பலாலி விமான நிலையத்தை அடைந்தது. விமானம் பயணத்தைத் தொடங்கிய நேரம் யாது?

பயணத்தை முடித்த நேரம் = மு.ப. 9.16
செலவழித்த நேரம் = 26 நிமிடங்கள்

| | மணி | நிமிடம் |
|---|---|---|
| | 9 | 16 |
| − | 0 | 26 |
| | 8 | 50 |

நிமிட நிரலில் 16 இலிருந்து 26 ஐக் கழிக்க முடியாது. மணித்தியால நிரலிலிருந்து 1 ஐ நிமிட நிரலுக்குக் கொண்டு சென்று கூட்டும்போது 76 நிமிடங்கள் (60 + 16 நிமிடங்கள்) ஆகும். இனி 76 நிமிடங்களிலிருந்து 26 நிமிடங்களைக் கழிக்கும்போது 50 நிமிடங்களாகும். மணித்தியால நிரலில் மீதி 8 ஆகும்.

பயணத்தைத் தொடங்கிய நேரம் மு.ப. 8.50 ஆகும்.

(1) துளசி ஒரு புத்தகத்தை வாசிப்பதற்கு 2 மணித்தியாலங்கள் 30 நிமிடங்கள் எடுத்தாள். அவள் அப்புத்தகத்தை பி.ப. 3.45 இற்கு வாசித்து முடித்தாள். துளசி அப்புத்தகத்தை வாசிக்கத் தொடங்கிய நேரம் யாது?

(2) துவிச்சக்கர வண்டிப் போட்டியாளர் ஒருவர் 4 மணித்தியாலங்கள் 15 நிமிடங்கள் பயிற்சி செய்த பின்னர் மு.ப. 10.30 இற்குப் பயிற்சியை முடித்தார். அவர் பயிற்சியை ஆரம்பித்த நேரம் யாது?

(3) ஆரம்பப் பிரிவின் விளையாட்டுப் போட்டி பி.ப. 1.30 இற்கு முடிவுற்றது. விளையாட்டுப் போட்டி 5 மணித்தியாலங்கள் நடைபெற்றது. விளையாட்டுப்போட்டி ஆரம்பித்த நேரம் யாது?

# 23 வகுத்தல் II

**6 இனால் வகுப்போம்.**

**உதாரணம் 1**

84 ஐ 6 இனால் வகுப்போம்.

$$\begin{array}{r|l} & 14 \\ \hline 6 & 84 \\ & \underline{6} \\ & 24 \\ & \underline{24} \\ & \ \ 0 \end{array}$$

$84 \div 6 = 14$

**உதாரணம் 2**

608 ஐ 6 இனால் வகுப்போம்.

$$\begin{array}{r|l} & 101 \\ \hline 6 & 608 \\ & \underline{6} \\ & 00 \\ & \underline{\ 0} \\ & \ \ 08 \\ & \ \ \underline{\ 6} \\ & \ \ \ \ 2 \end{array}$$

$608 \div 6 = 101$ மீதி 2

**1** நெடும் வகுத்தல் முறையில் விடையைப் பெறுக.

(1) $60 \div 6$

(2) $99 \div 6$

(3) $186 \div 6$

(4) $516 \div 6$

(5) $615 \div 6$

(6) $840 \div 6$

(7) $953 \div 6$

(8) $634 \div 6$

(9) $800 \div 6$

(10) $904 \div 6$

## 2 நெடும் வகுத்தல் முறையில் பிரசினங்களைத் தீர்க்க.

**உதாரணம்**

ஒரு பாடசாலைக்கு 180 நிறப்பென்சிற் பெட்டிகள் கிடைத்துள்ளன. அவற்றை ஒரு வகுப்புக்கு 6 பெட்டிகள் வீதம் எத்தனை வகுப்புகளுக்கு வழங்கலாம்?

```
    30
6 | 180
    18
     00
      0
      0
```

$180 \div 6 = 30$

ஒரு வகுப்புக்குக் கிடைக்கும் நிறப்பென்சிற் பெட்டிகளின் எண்ணிக்கை 30 ஆகும்.

(1) 96 தேங்காய்களை 6 வீதம் எத்தனை பேருக்குக் கொடுக்கலாம்?

(2) 900 தென்னம்பிள்ளைகளை விவசாயிகளிடையே ஒருவருக்கு 6 வீதம் விநியோகிப்பதற்கு உத்தேசிக்கப்பட்டுள்ளது. அவை எத்தனை பேருக்கு விநியோகிப்பதற்குப் போதும்?

(3) மோகன் ஒரு தோட்டத்தில் 785 அன்னாசிக் கன்றுகளை ஒரு நிரையில் 6 வீதம் நட்டார். அவர் அவ்வாறு நட்ட நிரைகளின் எண்ணிக்கை யாது? எத்தனை கன்றுகள் எஞ்சியிருக்கும்?

(4) சேகர் பரிசளிப்பதற்காக 892 புத்தகங்களை 6 வீதம் கொண்ட பொதிகளாகக் கட்டினார்.

(i) 6 புத்தகங்கள் வீதமான எத்தனை பொதிகள் உள்ளன?

(ii) அத்தகைய ஒரு பொதியைச் செய்வதற்கு எஞ்சியிருக்கும் புத்தகங்களுடன் மேலும் எத்தனை புத்தகங்கள் தேவை?

## 7 இனால் வகுப்போம்.

**உதாரணம் 1**

91 ஐ 7 இனால் வகுப்போம்.

```
     13
7 | 91
    7
    21
    21
     0
```

$91 \div 7 = 13$

**உதாரணம் 2**

772 ஐ 7 இனால் வகுப்போம்.

```
     110
7 | 772
    7
    07
     7
     02
      0
      2
```

$772 \div 7 = 110$ மீதி 2

**3** நெடும் வகுத்தல் முறையில் பிரசினங்களைத் தீர்க்க.

(1) $42 \div 7$ (2) $217 \div 7$

(3) $499 \div 7$ (4) $805 \div 7$

(5) $840 \div 7$ (6) $700 \div 7$

(7) $900 \div 7$ (8) $714 \div 7$

(9) $434 \div 7$ (10) $978 \div 7$

**4** நெடும் வகுத்தல் முறையில் பிரசினங்களைத் தீர்க்க.

**உதாரணம் 1**

ஆசிரியர் 49 பிள்ளைகளை ஏழு பிள்ளைகள் கொண்ட குழுக்களாக்கினார். எத்தனை குழுக்கள் உள்ளன?

```
     7
7 | 49
    49
     0
```

$49 \div 7 = 7$

குழுக்களின் எண்ணிக்கை $= 7$

(1) ஒரு கல்விச் சுற்றுலாவிற் செல்வதற்கு இன்னும் 56 நாட்கள் உள்ளன. அந்நாட்களின் எண்ணிக்கை எத்தனை வாரங்களாகும்?

(2) சங்கரி சோகி விளையாட்டுக்குப் பயன்படுத்தப்படும் 728 சோகிகளை 7 வீதம் பொதிசெய்தார். பொதிகளின் எண்ணிக்கை யாது?

(3) ஒரு பாடசாலையில் உள்ள பிள்ளைகளுக்கு விநியோகிப்பதற்கு 905 பயிற்சிப் புத்தகங்கள் கிடைத்தன. ஒரு பிள்ளைக்கு 7 புத்தகங்கள் வீதம் விநியோகிக்கும்போது 2 புத்தகங்கள் எஞ்சியிருக்கின்றன. பாடசாலையில் உள்ள பிள்ளைகளின் எண்ணிக்கை யாது?

(4) ஒருவர் 714 அரிசிச் சாக்குகளை 7 லொறிகளில் சம எண்ணிக் கைகளில் ஏற்றினார். ஒரு லொறியில் உள்ள அரிசிச் சாக்குகளின் எண்ணிக்கை யாது?

# 24 மீட்டல் II

**1** தீர்க்க.

| (1) | | (2) | | (3) | | (4) | |
|---|---|---|---|---|---|---|---|
| $l$ | ml | $l$ | ml | $l$ | ml | $l$ | ml |
| 3 | 480 | 4 | 648 | 9 | 325 | 8 | 729 |
| + 6 | 124 | + 4 | 410 | − 3 | 125 | − 4 | 814 |
| | | | | | | | |

**2** ஓர் ஒப்பந்தகாரர் ஒரு கட்டடத்தில் தீந்தையைப் பூசுவதற்கு 14 $l$ 800 ml நீல நிறத் தீந்தையையும் 10 $l$ 420 ml ரோசா நிறத் தீந்தையையும் 8 $l$ 650 ml வெள்ளை நிறத் தீந்தையையும் கொண்டு வந்தார்.

(1) நீல நிறத் தீந்தையின் அளவுக்கும் வெள்ளை நிறத் தீந்தையின் அளவுக்குமிடையே உள்ள வித்தியாசம் யாது?

(2) ரோசா நிறத் தீந்தையின் அளவிலும் பார்க்க நீல நிறத் தீந்தையின் அளவு எவ்வளவினால் கூடியது?

(3) ரோசா நிறத் தீந்தையுடன் வெள்ளை நிறத் தீந்தை கலக்கப்பட்டால், பாத்திரத்தில் உள்ள தீந்தையின் அளவு யாது?

**3** இரு போத்தல்களில் முறையே 180 ml, 150 ml தோடம்பழச்சாறு உள்ளது.

(1) இரு போத்தல்களிலும் உள்ள தோடம்பழச்சாறின் மொத்த அளவு யாது?

(2) 1 $l$ தோடம்பழச்சாற்றுப் பானத்தைத் தயாரிப்பதற்கு மேற்குறித்த தோடம்பழச்சாற்றுடன் எவ்வளவு நீரைச் சேர்க்க வேண்டும்?

**4** **தீர்க்க.**

| (1) | | | (2) | | | (3) | | | (4) | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| kg | g | | kg | g | | kg | g | | kg | g |
| 30 | 450 | | 29 | 125 | | 56 | 341 | | 46 | 459 |
| + 11 | 820 | | + 10 | 912 | | – 31 | 500 | | – 15 | 565 |
| | | | | | | | | | | |

**5** **வசனங்களை எழுதித் தீர்க்க.**

(1) விவசாயி ஒருவர் முதலாம் நாளில் 12 kg 800 g நிறையுள்ள ஒரு வளமாக்கியையும் இரண்டாம் நாளில் 7 kg 250 g நிறையுள்ள இன்னொரு வளமாக்கியையும் காய்கறிப் பாத்திகளுக்கு இட்டார். இடப்பட்ட வளமாக்கிகளின் மொத்த நிறை யாது?

(2) ஒரு பேக்கரிக்கு 56 kg கோதுமை மா கொண்டு வரப்பட்டது. அதில் 25 kg 800 g ஆனது பணிசைச் செய்வதற்காகப் பயன்படுத்தப் பட்டது. எஞ்சியுள்ள கோதுமை மாவின் நிறை யாது?

**6** **கீழே தரப்பட்டுள்ள ஒவ்வொரு திண்மப் பொருள்களினதும்**

(i) பெயர்
(ii) முகங்களின் எண்ணிக்கை
(iii) உச்சிகளின் எண்ணிக்கை
(iv) விளிம்புகளின் எண்ணிக்கை

ஆகியவற்றை எழுதுக.

(1)


(2)


(3)


(4)


7. மூன்று ஆரம்பப் பிரிவுப் பாடசாலைகளில் உள்ள மாணவர்களின் எண்ணிக்கைகள் தொடர்பான விவரங்கள் அட்டவணையில் காணப் படுகின்றன.

| பாடசாலை | மாணவர்களின் எண்ணிக்கை |
|---|---|
| $A$ | 370 |
| $B$ | 260 |
| $C$ | 820 |

(1) $A$, $B$ ஆகிய பாடசாலைகளில் உள்ள மாணவர்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(2) பாடசாலை $C$ இல் உள்ள மாணவர்களின் எண்ணிக்கையானது $A$, $B$ ஆகிய பாடசாலைகளில் உள்ள மாணவர்களின் மொத்த எண்ணிக்கையை விட எவ்வளவு கூடுதலானது?

8. ஒரு குறித்த பாடசாலையின் கல்விச் சுற்றுலாவில் பங்குபற்றிய பிள்ளைகளின் எண்ணிக்கையைக் காட்டும் அட்டவணை கீழே தரப்பட்டுள்ளது.

| | தரம் 5 | தரம் 4 | தரம் 3 | தரம் 2 |
|---|---|---|---|---|
| மாணவர்களின் எண்ணிக்கை | 45 | 40 | 45 | 40 |

(1) ஒவ்வொரு தரத்திலிருந்தும் பங்குபற்றும் மாணவர்களின் எண்ணிக்கையைக் காட்டும் நிரல் வரைபை வரைக. (பயிற்சிப் புத்தகத்தில் ஒரு கட்டத்துக்குப் பொருத்தமான மாணவர் எண்ணிக்கையை தெரிவுசெய்க).

(2) நிரல் வரைபில் காட்டப்படும் தகவல்களை விவரிக்கும் 5 வாக்கியங்களை எழுதுக.

9



(1) (i) மேலேயுள்ள உருவத்தின் $\frac{4}{10}$ ஐ நிறந் தீட்டுக.

(ii) நிறந் தீட்டிய அளவைத் தசம எண்ணாக எழுதுக.

(2) (i) உருவின் நிறந் தீட்டாத பகுதியை முழு உருவத்தின் பின்னமாக எழுதுக.

(ii) அதனைத் தசம எண்ணாக எழுதுக.

10 அட்டவணையை நிரப்புக.

| உருவ வகைக் குறிப்பீடு | பின்னமாக | தசம எண்ணாக |
|---|---|---|
|  | ................... | ............................................... |
|  | ................... | 0.2 |
|  | $\frac{3}{10}$ | ............................................... |
|  | ................... | ............................................... |
|  | ................... | 0.8 |

**11** **சுருக்குக.**

(1)

| | m | cm |
|---|---|---|
| | 47 | 36 |
| + | 11 | 44 |

(2)

| | m | cm |
|---|---|---|
| | 33 | 34 |
| + | 20 | 71 |

(3)

| | m | cm |
|---|---|---|
| | 37 | 81 |
| + | 45 | 26 |

(4)

| | m | cm |
|---|---|---|
| | 85 | 64 |
| − | 11 | 72 |

(5)

| | m | cm |
|---|---|---|
| | 57 | 26 |
| − | 41 | 74 |

(6)

| | m | cm |
|---|---|---|
| | 68 | 59 |
| − | 17 | 64 |

(7)

| | m | cm |
|---|---|---|
| | 3 | 30 |
| × | | 3 |

(8)

| | m | cm |
|---|---|---|
| | 12 | 32 |
| × | | 5 |

(9)

| | m | cm |
|---|---|---|
| | 24 | 10 |
| × | | 4 |

(10) $4\overline{)\,8 \text{ m } 72 \text{ cm}}$

(11) $2\overline{)\,36 \text{ m } 24 \text{ cm}}$

(12) $3\overline{)\,81 \text{ m } 9 \text{ cm}}$

**12** **பிரசினங்களைத் தீர்க்க.**

(1) கம்பி வேலி ஒன்றை அமைப்பதற்குக் கொண்டு வரப்பட்ட இரண்டு கம்பிச் சுருள்கள் முறையே 25 m 75 cm, 50 m 50 cm நீளமுள்ளன. இரண்டு கம்பிச் சுருள்களினதும் மொத்த நீளம் யாது? கம்பிச் சுருள்கள் இரண்டினதும் நீளங்களுக்கிடையேயுள்ள வித்தியாசம் யாது?

(2) 16 m 35 cm நீளத்திற்கு வெட்ட வேண்டிய ஒரு வடிகாலில் சங்கர் 7 m 15 cm ஐ வெட்டினார். குமார் அதன் எஞ்சிய பகுதியை வெட்டினார். குமார் வெட்டிய நீளம் யாது?

(3) ஒரு சட்டையைத் தைப்பதற்கு 2 m 70 cm துணி தேவை. அத்தகைய 5 சட்டைகளைத் தைப்பதற்குத் தேவையான துணியின் அளவு யாது?

(4) 16 m 20 cm நீளமுள்ள ஒரு மதிலில் ஓவியம் வரைவதற்காக அது சம நீளமுள்ள 4 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. ஒரு பகுதியின் நீளத்தைக் காண்க.

**13** பெருக்குக.

(1)

| | | |
|---|---|---|
| | 3 | 1 |
| × | | 6 |
| | | |

(2)

| | | |
|---|---|---|
| 9 | 0 | 7 |
| × | | 6 |
| | | |

(3)

| | | |
|---|---|---|
| | 7 | 7 |
| × | | 7 |
| | | |

(4)

| | | |
|---|---|---|
| 8 | 6 | 1 |
| × | | 7 |
| | | |

**14** பிரசினங்களைத் தீர்க்க.

(1) ஒரு பேக்கரி உரிமையாளர் ஒரு நாளில் 625 பாண்களைத் தயாரிப்பார். தினமும் ஒரே எண்ணிக்கையான பாண்களைத் தயாரிப்பார் எனின், 6 நாட்களில் அவர் தயாரிக்கும் பாண்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(2) ஒரு புத்தகப் பொதியில் 7 புத்தகங்கள் உண்டு. இவ்வாறான 750 பொதிகளில் உள்ள புத்தகங்களின் மொத்த எண்ணிக்கை யாது?

**15** நெடும் வகுத்தல் முறையில் விடையைப் பெறுக.

| | | |
|---|---|---|
| (1) 54 ÷ 6 | (2) 70 ÷ 7 | (3) 654 ÷ 6 |
| (4) 756 ÷ 7 | (5) 970 ÷ 6 | (6) 901 ÷ 7 |

16 **பிரசினத்தைத் தீர்க்க.**

(1) ஒரு கொடிச் சரத்தில் 6 கொடிகள் வீதம் 846 கொடிகளைக் கொண்டு எத்தனை சரங்களைத் தயாரிக்கலாம்?

(2) 350 மாம்பழங்களிலிருந்து 7 மாம்பழங்கள் வீதம் உள்ள எத்தனை பெட்டிகளை அமைக்கலாம்?

(3) 742 றம்புட்டான் பழங்கள் 6 சமனான குவியலாக்கப்பட்டன. அப்போது ஒரு குவியலில் உள்ள றம்புட்டான் பழங்களின் எண்ணிக்கை யாது? எஞ்சியுள்ள றம்புட்டான் பழங்களின் எண்ணிக்கை யாது?

17 **விலைச் சுட்டியைப் பார்த்து விடை எழுதுக.**

| **பொருள்** | 1 kg **இன் விலை** **ரூபாய்** | **சதம்** |
|---|---|---|
| சீனி | 100 | 00 |
| பருப்பு | 130 | 00 |
| உருளைக்கிழங்கு | 300 | 00 |
| கோதுமை மா | 120 | 00 |
| அரிசி | 110 | 00 |
| வெங்காயம் | 156 | 00 |
| மிளகாய் | 600 | 00 |
| கருவாடு | 950 | 00 |
| காராமணிப் பயறு | 470 | 00 |

பின்வரும் பொருள்களின் விலைகளைக் காண்பதற்கு வேறுவேறாகச் சிட்டைகளைத் தயாரிக்க.

(1) 1 kg சீனி, 500 g காராமணிப் பயறு, 750 g மிளகாய் ஆகியவற்றுக்காகச் செலுத்த வேண்டிய பணத்தைக் காண்க.

(2) 500 g உருளைக்கிழங்கு, 750 g கோதுமை மா, 1 kg சீனி ஆகியவற்றுக்காகச் செலுத்த வேண்டிய பணம் யாது?

(3) 2 kg வெங்காயம், 3 kg மிளகாய், 500 g கருவாடு ஆகிய வற்றுக்காகச் செலுத்த வேண்டிய பணம் யாது?

(4) 2 kg அரிசி, 500 g கோதுமை மா, 500 g சீனி ஆகியவற்றை வாங்கி 500 ரூபாயைக் கொடுக்கும்போது பெறப்படும் மீதிப் பணம் யாது?

(5) (i) அரிசி, பருப்பு, வெங்காயம் ஆகியவற்றை 500 g வீதம் வாங்குவதற்குத் தேவையான பணம் யாது?

(ii) இதற்காக 500 ரூபாயைக் கடை உரிமையாளரிடம் வழங்கினால் கிடைக்கும் மீதிப் பணம் யாது?

**18** **பிரசினத்தைத் தீர்க்க.**

(1) திரைப்படம் ஒன்றினது முதலாவது திரைக்காட்சி மு.ப. 10.30 இற்கு ஆரம்பமாகி பி.ப. 1.00 இற்கு முடிவடைந்தது. திரைப்படத்தின் முதலாவது காட்சிக்காகச் செலவிட்ட நேரம் எவ்வளவு ?

(2) பாடசாலையில் டெங்கு சிரமதானம் மு.ப. 7.50 இற்கு ஆரம்பமாகி 3 மணித்தியாலம் 30 நிமிடங்கள் நடைபெற்றது. டெங்கு சிரமதானம் முடிவடைந்த நேரம் யாது?

(3) அலுவலகத்திலிருந்து புகையிரத நிலையத்துக்குச் செல்வதற்கு நாதன் 24 நிமிடங்களை எடுப்பார். அவர் பி.ப. 4.45 இற்குப் புகையிரத நிலையத்தை அடைந்தால், அவர் அலுவலகத்திலிருந்து புறப்பட்ட நேரம் யாது?

# 25 திசைகள்

கீதா, சூரியன் உதிக்கும் திசையை நீ அறிவாயா?



சூரியன் உதிக்கும் திசை கிழக்குத் திசையாகும். ஏன்? நாம் நான்காம் வகுப்பில் நான்கு பிரதான திசைகளையும் பற்றிப் படித்தோம்.






நான்கு பிரதான திசைகள் மாத்திரமல்ல, நான்கு உப திசைகளும் உள்ளன.






பிரதான திசைகள் நான்கும் உபதிசைகள் நான்கும் உள்ளன.

1 பாடசாலை வளவில் சில இடங்கள் இருக்கும் விதம் கீழே காட்டப் பட்டுள்ளது.





வள்ளுவர் மண்டபம்



சிற்றுண்டிச்சாலை


மாமரம்


பிரதான மண்டபம்


பாரதி மண்டபம்


கணித ஆய்கூடம்


நூலகம்


பிரதான வாயில்


அலுவலகம்

- பாரதி மண்டபத்திற்குத் தெற்கே பிரதான வாயில் உள்ளது.
- பாரதி மண்டபத்திற்குத் தென்மேற்கே நூலகம் உள்ளது.
- பாரதி மண்டபத்திற்கு வடகிழக்கே மாமரம் உள்ளது.

மேலே குறிப்பிட்ட இடங்களைப் பார்த்து விடை எழுதுக.

(1) பாரதி மண்டபத்திற்கு வடக்கே உள்ளது யாது?

(2) கணித ஆய்கூடத்திற்கு மேற்கே உள்ளவை யாவை?

(3) நூலகத்திற்கு எத்திசையில் பிரதான மண்டபம் உள்ளது?

(4) சிற்றுண்டிச்சாலைக்குத் தெற்கே உள்ளவை யாவை?

(5) பாரதி மண்டபத்திற்குத் தென்கிழக்கே உள்ளது யாது?

(6) பாரதி மண்டபத்திற்கு வடமேற்கே உள்ளது யாது?

2 பின்வரும் படத்தைப் பார்த்து வெற்றிடங்களை நிரப்புக.


பாடசாலை


எரிபொருள் நிரப்பும் நிலையம்


காவல் நிலையம்






மருத்துவமனை


கமலன்



வங்கி



பேருந்துத் தரிப்பிடம்


வர்த்தக நிலையம்


அஞ்சல் அலுவலகம்

(1) கமலனுக்கு ...................... எரிபொருள் நிரப்பும் நிலையம் உள்ளது.

(2) கமலனுக்குத் தென்மேற்கே ....................................................... உள்ளது.

(3) கமலனுக்கு மேற்கே ...................................................................... உள்ளது.

(4) கமலனுக்கு ................................................. வர்த்தக நிலையம் உள்ளது.

(5) கமலனுக்கு வடகிழக்கே ............................................................ உள்ளது.

(6) கமலனுக்கு ........................................................................... வங்கி உள்ளது.

(7) கமலனுக்கு ............................................................... பாடசாலை உள்ளது.

(8) கமலனுக்குத் தென்கிழக்கே ...................................................... உள்ளது.

3 ஒரு வீட்டையும் அதன் சுற்றாடலையும் காட்டும் படம் கீழே தரப்பட்டுள்ளது. அதனைக் கொண்டு கேட்கப்பட்டுள்ள வினாக் களுக்கு விடை எழுதுக.




(1) கொய்யாமரம் வீட்டிற்கு வடமேற்கே ........................ உள்ளது.

(2) பலாமரத்திற்குத் தெற்கே ............................., ............................. ஆகியன உள்ளன.

(3) கிணற்றுக்கு ............................. வீடு உள்ளது.

(4) வீட்டுக்கு ............................. படலை உள்ளது.

(5) பலாமரத்திற்குத் தென்கிழக்கே ............................., ............................. ஆகியன உள்ளன.

(6) கிணற்றுக்கு ............................. கொய்யாமரம் உள்ளது.

# 26 பெருக்கல் III

எட்டின் பெருக்கல் வாய்பாட்டை உருவாக்குவோம்.



$1 \times 8 = 8$

ஒன்று தரம் எட்டு எட்டு



$8 + 8 = 16$

$2 \times 8 = 16$

இரண்டு தரம் எட்டு பதினாறு



$8 + 8 + 8 = 24$

$3 \times 8 = 24$

மூன்று தரம் எட்டு இருபத்து நான்கு



$8 + 8 + 8 + 8 = 32$

$4 \times 8 = 32$

நான்கு தரம் எட்டு முப்பத்திரண்டு



$8 + 8 + 8 + 8 + 8 = 40$

$5 \times 8 = 40$

ஐந்து தரம் எட்டு நாற்பது



$8 + 8 + 8 + 8 + 8 + 8 = 48$

$6 \times 8 = 48$

ஆறு தரம் எட்டு நாற்பத்தெட்டு



$8 + 8 + 8 + 8 + 8 + 8 + 8 = 56$

$7 \times 8 = 56$

ஏழு தரம் எட்டு ஐம்பத்தாறு



$8 + 8 + 8 + 8 + 8 + 8 + 8 + 8 = 64$

$8 \times 8 = 64$

எட்டு தரம் எட்டு அறுபத்து நான்கு



$8 + 8 + 8 + 8 + 8 + 8 + 8 + 8 + 8 = 72$

$9 \times 8 = 72$

ஒன்பது தரம் எட்டு எழுபத்திரண்டு



$8 + 8 + 8 + 8 + 8 + 8 + 8 + 8 + 8 + 8 = 80$

$10 \times 8 = 80$

பத்து தரம் எட்டு எண்பது

**1** 8 இன் பெருக்கல் வாய்பாட்டைக் கொண்டு வெற்றிடங்களை நிரப்புக.

| | | | |
|---|---|---|---|
| (1) | 1 × 8 = ....... | (6) | 6 × ....... = 48 |
| (2) | 2 × ....... = 16 | (7) | 7 × 8 = ....... |
| (3) | 3 × 8 = ....... | (8) | ....... × 8 = 64 |
| (4) | ..... × 8 = 32 | (9) | ....... × ....... = 72 |
| (5) | 5 × 8 = ....... | (10) | ....... × ....... = 80 |

**2** பெருக்கத்திற்குப் பொருத்தமான விடையைத் தெரிந்தெடுத்து இணைக்க.

| | |
|---|---|
| 5 × 8 | 64 |
| 1 × 8 | 24 |
| 8 × 8 | 40 |
| 3 × 8 | 48 |
| 6 × 8 | 8 |

| | |
|---|---|
| 2 × 8 | 72 |
| 7 × 8 | 56 |
| 4 × 8 | 80 |
| 9 × 8 | 16 |
| 10 × 8 | 32 |

## எட்டினால் பெருக்குவோம்.

**உதாரணம்**

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | |
| | | 5 | 4 | 8 |
| × | | | | 8 |
| | 4 | 3 | 8 | 4 |
| | | 3 | 6 | |

விடை இவ்வாறே பெறப்படுகிறது.

| | ஆ | நூ | ப | ஒ | |
|---|---|---|---|---|---|
| | | 5 | 4 | 8 | ← 500 + 40 + 8 |
| × | | | | 8 | |
| | | | 6 | 4 | ← முதலில் 8 ஆனது 8 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| | | 3 | 2 | 0 | ← இரண்டாவதாக 40ஆனது 8 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| | 4 | 0 | 0 | 0 | ← மூன்றாவதாக 500 ஆனது 8 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| | 4 | 3 | 8 | 4 | ← அடுத்து 64 உம் 320 உம் 4000 உம் கூட்டப்பட்டுள்ளன. |

**3** பெருக்குக.

| (1) | (2) | (3) | (4) |
| --- | --- | --- | --- |
| $\begin{array}{r} 31 \\ \times\ 8 \\ \hline \\ \hline \end{array}$ | $\begin{array}{r} 50 \\ \times\ 8 \\ \hline \\ \hline \end{array}$ | $\begin{array}{r} 62 \\ \times\ 8 \\ \hline \\ \hline \end{array}$ | $\begin{array}{r} 47 \\ \times\ 8 \\ \hline \\ \hline \end{array}$ |

| (5) | (6) | (7) | (8) |
| --- | --- | --- | --- |
| $\begin{array}{r} 212 \\ \times\ 8 \\ \hline \\ \hline \end{array}$ | $\begin{array}{r} 109 \\ \times\ 8 \\ \hline \\ \hline \end{array}$ | $\begin{array}{r} 643 \\ \times\ 8 \\ \hline \\ \hline \end{array}$ | $\begin{array}{r} 814 \\ \times\ 8 \\ \hline \\ \hline \end{array}$ |

| (9) | (10) | (11) | (12) |
| --- | --- | --- | --- |
| $\begin{array}{r} 700 \\ \times\ 8 \\ \hline \\ \hline \end{array}$ | $\begin{array}{r} 750 \\ \times\ 8 \\ \hline \\ \hline \end{array}$ | $\begin{array}{r} 818 \\ \times\ 8 \\ \hline \\ \hline \end{array}$ | $\begin{array}{r} 606 \\ \times\ 8 \\ \hline \\ \hline \end{array}$ |

**4** பிரசினங்களைத் தீர்க்க.

(1) ஒரு மாலையைச் செய்வதற்கு 79 பவளங்கள் தேவை. அத்தகைய 8 மாலைகளைச் செய்வதற்குத் தேவையான பவளங்களின் எண்ணிக்கை யாது?

(2) ஒரு தோட்டத்தில் இறப்பர் மரங்கள் ஒரு நிரையில் 8 வீதம் 160 நிரைகளில் உள்ளன. தோட்டத்தில் உள்ள இறப்பர் மரங்களின் மொத்த எண்ணிக்கை யாது?

(3) ஓர் உடையில் 8 பொத்தான்கள் வீதம் பொருத்தி 425 உடைகள் தைக்கப்பட்டுள்ளன. உடைகளில் பொருத்தப்பட்ட பொத்தான்களின் மொத்த எண்ணிக்கை யாது?

## ஒன்பதின் பெருக்கல் வாய்பாட்டை உருவாக்குவோம்.



$1 \times 9 = 9$

**ஒன்று தரம் ஒன்பது** **ஒன்பது**



$9 + 9 = 18$

$2 \times 9 = 18$

**இரண்டு தரம் ஒன்பது** **பதினெட்டு**



$9 + 9 + 9 = 27$

$3 \times 9 = 27$

**மூன்று தரம் ஒன்பது** **இருபத்தேழு**



$9 + 9 + 9 + 9 = 36$

$4 \times 9 = 36$

**நான்கு தரம் ஒன்பது** **முப்பத்தாறு**



$9 + 9 + 9 + 9 + 9 = 45$

$5 \times 9 = 45$

**ஐந்து தரம் ஒன்பது** **நாற்பத்தைந்து**



$9 + 9 + 9 + 9 + 9 + 9 = 54$

$6 \times 9 = 54$

**ஆறு தரம் ஒன்பது** **ஐம்பத்து நான்கு**



$9 + 9 + 9 + 9 + 9 + 9 + 9 = 63$

$7 \times 9 = 63$

**ஏழு தரம் ஒன்பது** **அறுபத்து மூன்று**



$9 + 9 + 9 + 9 + 9 + 9 + 9 + 9 = 72$

$8 \times 9 = 72$

**எட்டு தரம் ஒன்பது** **எழுபத்திரண்டு**



$9 + 9 + 9 + 9 + 9 + 9 + 9 + 9 + 9 = 81$

$9 \times 9 = 81$

**ஒன்பது தரம் ஒன்பது** **எண்பத்தொன்று**



$9 + 9 + 9 + 9 + 9 + 9 + 9 + 9 + 9 + 9 = 90$

$10 \times 9 = 90$

**பத்து தரம் ஒன்பது** **தொண்ணூறு**

5. 9 இன் பெருக்கல் வாய்பாட்டைக் கொண்டு வெற்றிடங்களை நிரப்புக.

(1) 1 × ....... = 9

(2) 2 × 9 = .......

(3) 3 × ....... = 27

(4) 4 × 9 = .......

(5) ....... × 9 = 45

(6) 6 × 9 = .......

(7) ....... × 9 = 63

(8) 8 × ....... = 72

(9) ....... × ....... = 81

(10) ....... × ....... = 90

6. 9 இன் பெருக்கல் வாய்பாட்டைக் கொண்டு வெற்று அடைப்புகளை நிரப்புக.

| × | 3 | 6 | 4 | 2 | 5 | 9 | 7 | 10 | 8 | 1 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 9 | | | | 18 | | | | | | 9 |

## ஒன்பதால் பெருக்குவோம்.

**உதாரணம்**

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | |
| | | 2 | 5 | 3 |
| × | | | | 9 |
| | 2 | 2 | 7 | 7 |
| | | 4 | 2 | |

விடை இவ்வாறே பெறப்படுகிறது.

| | ஆ | நூ | ப | ஒ | |
|---|---|---|---|---|---|
| | | 2 | 5 | 3 | ← 200 + 50 + 3 |
| × | | | | 9 | |
| | | | 2 | 7 | ← முதலில் 3 ஆனது 9 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| | | 4 | 5 | 0 | ← இரண்டாவதாக 50 ஆனது 9 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| | 1 | 8 | 0 | 0 | ← மூன்றாவதாக 200 ஆனது 9 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| | 2 | 2 | 7 | 7 | ← அடுத்து 27 உம் 450 உம் 1800 உம் கூட்டப்பட்டுள்ளன. |

## 7 பெருக்குக.

(1)
$$\begin{array}{r} 21 \\ \times \quad 9 \\ \hline \\ \hline \end{array}$$

(2)
$$\begin{array}{r} 35 \\ \times \quad 9 \\ \hline \\ \hline \end{array}$$

(3)
$$\begin{array}{r} 64 \\ \times \quad 9 \\ \hline \\ \hline \end{array}$$

(4)
$$\begin{array}{r} 407 \\ \times \quad 9 \\ \hline \\ \hline \end{array}$$

(5)
$$\begin{array}{r} 382 \\ \times \quad 9 \\ \hline \\ \hline \end{array}$$

(6)
$$\begin{array}{r} 530 \\ \times \quad 9 \\ \hline \\ \hline \end{array}$$

(7)
$$\begin{array}{r} 642 \\ \times \quad 9 \\ \hline \\ \hline \end{array}$$

(8)
$$\begin{array}{r} 200 \\ \times \quad 9 \\ \hline \\ \hline \end{array}$$

## 8 பிரசினங்களைத் தீர்க்க.

(1) ஒரு வகுப்பில் 48 பிள்ளைகள் உள்ளனர். ஒரு பிள்ளைக்கு 9 பயிற்சிப் புத்தகங்கள் வீதம் கொடுப்பதற்குத் தேவையான பயிற்சிப் புத்தகங்களின் மொத்த எண்ணிகை யாது?

(2) ஒரு நாற்றுமேடையில் ஒரு நிரையில் 9 மாங்கன்றுகள் உள்ளன. நாற்று மேடையில் அத்தகைய 125 நிரைகள் உள்ளன. நாற்று மேடையில் உள்ள மாங்கன்றுகளின் மொத்த எண்ணிக்கை யாது?

(3) ஒரு பெட்டியில் 9 ரெனிஸ் பந்துகள் வீதம் உள்ளன. அத்தகைய 340 பெட்டிகளில் இருக்கும் ரெனிஸ் பந்துகளின் மொத்த எண்ணிக்கை யாது?

(4) ஒரு பூக்கூடையில் 9 தாமரை மலர்கள் உள்ளன. அத்தகைய 500 பூக்கூடைகளில் இருக்கும் தாமரை மலர்களின் மொத்த எண்ணிக்கை யாது?

## பத்தால் பெருக்குவோம்.

**9** வெற்றிடங்களை நிரப்புக.

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | 1 | × | 10 | = | ....... | (6) | ....... | × 10 | = | 60 |
| (2) | ....... | × | 10 | = | 20 | (7) | 7 | × 10 | = | ....... |
| (3) | 3 | × | ....... | = | 30 | (8) | ....... | × 10 | = | 80 |
| (4) | ....... | × | 10 | = | 40 | (9) | 9 | × ....... | = | 90 |
| (5) | 5 | × | ....... | = | 50 | (10) | ....... | × 10 | = | 100 |

**10** பெருக்குக.

**உதாரணம்**

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | 1 | 2 |
| | × | 1 | 0 |
| | 1 | 2 | 0 |
| | | | |

விடை இவ்வாறே பெறப்படுகிறது.

| நூ | ப | ஒ | |
|---|---|---|---|
| | 1 | 2 | ← 10 + 2 |
| × | 1 | 0 | |
| | 2 | 0 | ← முதலில் 2 ஆனது 10 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 1 | 0 | 0 | ← இரண்டாவதாக 10 ஆனது 10 ஆல் பெருக்கப்பட்டுள்ளது. |
| 1 | 2 | 0 | ← அடுத்து 20 உம் 100 உம் கூட்டப்பட்டுள்ளன. |

| (1) | (2) | (3) | (4) |
|---|---|---|---|
| 2 3 | 2 0 | 4 1 | 6 5 |
| × 1 0 | × 1 0 | × 1 0 | × 1 0 |
| | | | |

| (5) | (6) | (7) | (8) |
|---|---|---|---|
| 7 0 | 8 4 | 8 7 | 9 9 |
| × 1 0 | × 1 0 | × 1 0 | × 1 0 |
| | | | |

**11** **பெருக்குக.**

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| (1) | 15 × 10 | = | ....... | (6) | 61 × 10 | = | ....... |
| (2) | 24 × 10 | = | ....... | (7) | 73 × 10 | = | ....... |
| (3) | 48 × 10 | = | ....... | (8) | 60 × 10 | = | ....... |
| (4) | 37 × 10 | = | ....... | (9) | 82 × 10 | = | ....... |
| (5) | 55 × 10 | = | ....... | (10) | 90 × 10 | = | ....... |

**12** **பிரசினங்களைத் தீர்க்க.**

(1) ஒரு பெட்டியில் 10 நூற்பந்துகள் உள்ளன. அத்தகைய 25 பெட்டிகளில் உள்ள நூற்பந்துகளின் எண்ணிக்கை யாது ?

(2) ஒரு குவியலில் 10 விளாம்பழங்கள் வீதம் 80 குவியல்கள் விற்பதற்கு வைக்கப்பட்டுள்ளன. விளாம்பழங்களின் மொத்த எண்ணிக்கை யாது ?

(3) ஒரு பெட்டியில் 10 யோகட் கோப்பைகள் உள்ளன. அத்தகைய 95 பெட்டிகளில் உள்ள யோகட் கோப்பைகளின் மொத்த எண்ணிக்கை யாது ?

# 27 கனவளவும் கொள்ளளவும் II

1. பின்வரும் பழப்பான வகைகள் ஒவ்வொன்றிலும் உள்ள மொத்தப் பானத்தின் அளவு யாது?

**உதாரணம்**




$$\begin{array}{r} 300\text{ ml} \\ \times \quad 3 \\ \hline 900\text{ ml} \\ \hline \end{array}$$




$$\begin{array}{r} 800\text{ ml} \\ \times \quad 4 \\ \hline \\ \hline \end{array}$$




$$\begin{array}{rr} l & \text{ml} \\ 1 & 250 \\ \times & 4 \\ \hline & \\ \hline \end{array}$$




$$\begin{array}{rr} l & \text{ml} \\ 5 & 250 \\ \times & 5 \\ \hline & \\ \hline \end{array}$$

2 பெருக்குக.

**உதாரணம்**

| | $l$ | ml |
|---|---|---|
| | 1 | 635 |
| × | | 2 |
| | 3 | 270 |

(1)

| | $l$ | ml |
|---|---|---|
| | 3 | 115 |
| × | | 3 |
| | | |

(2)

| | $l$ | ml |
|---|---|---|
| | 5 | 310 |
| × | | 4 |
| | | |

(3)

| | $l$ | ml |
|---|---|---|
| | 11 | 700 |
| × | | 5 |
| | | |

(4)

| | $l$ | ml |
|---|---|---|
| | 32 | 810 |
| × | | 2 |
| | | |

(5)

| | $l$ | ml |
|---|---|---|
| | 40 | 305 |
| × | | 4 |
| | | |

(6)

| | $l$ | ml |
|---|---|---|
| | 12 | 500 |
| × | | 4 |
| | | |

(7)

| | $l$ | ml |
|---|---|---|
| | 21 | 90 |
| × | | 4 |
| | | |

(8)

| | $l$ | ml |
|---|---|---|
| | 8 | 6 |
| × | | 5 |
| | | |

(9)

| | $l$ | ml |
|---|---|---|
| | 36 | 410 |
| × | | 5 |
| | | |

3 வசனங்களை எழுதித் தீர்க்க.

**உதாரணம்**

பாற்பண்ணையாளர் ஒருவர் ஒவ்வொரு நாளும் 5 $l$ 100 ml பாலை ஒரு சேகரிப்பு நிலையத்திற்கு வழங்குகின்றார். அவர் 5 நாட்களின்போது நிலையத்திற்கு வழங்கிய பாலின் அளவு யாது?

| | $l$ | ml |
|---|---|---|
| | 5 | 100 |
| × | | 5 |
| | 25 | 500 |

5 நாட்களில் வழங்கிய பாலின் அளவு 25 $l$ 500 ml ஆகும்.

(1) ஒரு வகுப்பறையில் பூசுவதற்கு 4 *l* 400 ml தீந்தை தேவை. அத்தகைய 3 வகுப்பறைகளில் பூசுவதற்குத் தேவையான தீந்தையின் அளவு யாது?

(2) ஒரு பீப்பாவில் 10 *l* 450 ml எண்ணெயை நிரப்பலாம். அத்தகைய 2 பீப்பாக்களில் நிரப்பத்தக்க எண்ணெயின் மொத்த அளவு யாது?

(3) ஒரு தாங்கியை முற்றாக நிரப்புவதற்கு 300 *l* நீர் தேவை. அத்தகைய 5 தாங்கிகளை முற்றாக நிரப்புவதற்குத் தேவையான நீரின் அளவு யாது?

(4) பணியாரங்களை உற்பத்தி செய்யும் ஒரு நிறுவனத்திற்கு ஒரு நாளைக்கு 45 *l* 250 ml சீனிப் பாணி தேவை. 5 நாட்களுக்குத் தேவையான சீனிப் பாணியின் மொத்த அளவு யாது?

**4** **வகுக்க.**

**உதாரணம்**

3 *l* 231 ml
2 | 6 *l* 462 ml
6
0 4
4
06
6
02
2
0

(1) 2 | 4 *l* 624 ml

(2) 2 | 8 *l* 126 ml

(3) 3 | 9 *l* 510 ml

(4) 3 | 12 *l* 123 ml

(5) 4 | 8 *l* 320 ml

(6) 4 | 16 *l* 428 ml

(7) 5 | 25 *l* 450 ml

(8) 5 | 20 *l* 105 ml

5 தீர்க்க.

**உதாரணம்**

முரளி 4 $l$ 960 ml பாலை 4 போத்தல்களில் சம அளவுகளில் இடுகின்றார். ஒரு போத்தலில் இடப்பட்ட பாலின் அளவு யாது?

```
      1 l  240 ml
   ┌──────────────
 4 │ 4 l 960 ml
   │ 4
   └───
     0  9
        8
     ─────
        16
        16
     ─────
          00
           0
     ─────
           0
```

ஒரு போத்தலில் இட்ட பாலின் அளவு 1 $l$ 240 ml ஆகும்.

(1) ஒரு சிறிய பீப்பாவில் 45 $l$ 750 ml தேங்காய் எண்ணெய் உள்ளது. அது சம அளவுகளில் ஐந்து பாத்திரங்களில் ஊற்றப்படுகின்றது. ஒரு பாத்திரத்தில் உள்ள தேங்காய் எண்ணெயின் அளவு யாது?

(2) ஒரே அளவுள்ள 4 பூச்சாடிகளுக்குத் தீந்தை பூசுவதற்கு 24 $l$ 600 ml தீந்தை தேவை. ஒரு பூச்சாடிக்கு தீந்தை பூசுவதற்குத் தேவையான தீந்தையின் அளவு யாது?

(3) சம அளவு நீரைக் கொள்ளும் 3 வாளிகளில் நீர் நிரப்பப்பட்டுள்ளது. அவற்றில் உள்ள நீரை ஒரு வெற்றுத் தாங்கியில் ஊற்றிய பின்னர் அதில் உள்ள நீரின் மொத்த அளவு 15 $l$ 120 ml ஆகும். ஒரு வாளியில் இருந்த நீரின் அளவு யாது?

(4) கமலன் ஒரு விழாவிற்காக ஐந்து தடவைகளில் சம அளவு குளிர் களியைக் கொண்டு வந்தார். அவர் கொண்டு வந்த குளிர்களியின் மொத்த அளவு 25 $l$ 750 ml ஆகும். அவர் ஒரு தடவை கொண்டு வந்த குளிர்களியின் அளவு யாது?

# 28 வகுத்தல் III

## 8 ஆல் வகுப்போம்.

**உதாரணம் 1**

96 ஐ 8 ஆல் வகுப்போம்.

```
     12
  8 | 96
      8
     --
     16
     16
     --
      0
```

$96 \div 8 = 12$

**உதாரணம் 2**

826 ஐ 8 ஆல் வகுப்போம்.

```
     103
  8 | 826
      8
      -
      02
       0
      --
       26
       24
       --
        2
```

$826 \div 8 = 103$ மீதி 2

**1** நெடும் வகுத்தல் முறையில் விடையைப் பெறுக.

(1) $104 \div 8$ (2) $128 \div 8$

(3) $408 \div 8$ (4) $720 \div 8$

(5) $800 \div 8$ (6) $649 \div 8$

(7) $872 \div 8$ (8) $808 \div 8$

(9) $990 \div 8$ (10) $802 \div 8$

**2** பிரசினங்களைத் தீர்க்க.

(1) 848 தோடம்பழங்கள் எட்டுப் பழங்கள் வீதம் பொதி செய்யப் பட்டுள்ளன. பொதிகளின் எண்ணிக்கை யாது?

(2) 957 பந்துகள் உள்ளன. கீதா எட்டுப் பந்துகள் வீதம் பெட்டிகளில் இடுகின்றாள். அவ்வாறான எத்தனை பெட்டிகள் உள்ளன? எத்தனை பந்துகள் எஞ்சியிருக்கும்?

